# கசடதபற

ஒரு வல்லின மாத ஏடு

ஆசிரியர்: நா. கிருஷ்ணமூர்த்தி

## பூனைக் குட்டிகள்

மேஜை மேல் படுத்துறங்கும்
கருப்புக் குட்டி
என்னைப் பேனா
எடுக்க விடாமல்
தடுக்கிறது.

நாற்காலியில்
படுத்துறங்கும்
கபில நிறக்குட்டி
என்னை உட்கார
அனுமதிக்க
மறுக்கிறது.

அடுப்பிலே
பூனைக்குட்டி
உறங்குகிறது
சமையல்
இன்று நேரமாகும்
என்கிறாள்
என் மனைவி.

ஐந்து பூனைக்குட்டிகளே
அதிகம் என்று
எண்ணும் எனக்கு
பாற்கடலில்,
வைகுண்டத்தில்,
எத்தனை பூனைக்குட்டிகள்
இருக்கும் என்று
கணக்கெடுக்கத் தோன்றுகிறது.

க. நா. சுப்ரமண்யம்.



கசடதபற

1 தேவடி தெரு
சென்னை 4

மார்ச்
ஏப்ரல் 1972

17
18

விலை: 60 காசு

# விமரிசனத்தின் எல்லைகள்

க. நா. சுப்ரமண்யம்

இலக்கிய விமரிசனத்தைப்பற்றிச் சில சில்லரைச் சந்தேகங்களைத் தமிழ் வாசகர்களுக்கும் (எனக்கும்தான்) விளக்கிக்கொள்வதற்காகவே நான் இந்தக் குறிப்புகளை எழுதுகிறேன். ஒரு கலையின் ஆரம்பதசையில் சொல்லப்படுகிற விஷயங்கள் எல்லாமே முடிவானவையல்ல என்பதை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். என்னைப்பற்றிய வரையில் நான் இதுபற்றியெல்லாம் "உரக்கச் சிந்திக்கிறேன்" என்று சொல்லலாமே தவிர வேறு சொல்வதற்கில்லை.

இன்னும் ஒரு விஷயமும் தெளிவாகவே சொல்லுகிறேன். சிறுகதையோ, நாவலோ, கவிதையோ எழுதும் போது வாசகர்களைப் பற்றிய நினைவைப் படைப்பாளன் அறவே ஒழித்துவிடவேண்டும் என்கிற நினைப்புள்ளவன் நான். ஆனால் இலக்கிய விமரிசனம் செய்யும்போது வாசகனுடைய நினைவும் கூடவே வரத்தான் செய்யும். என் இலக்கிய அனுபவத்தைத்தான் நான் எடுத்துச் சொல்ல முயலுகிறேன் என்றாலும் வாசகனுக்காகச் சொல்லுகிறேன் என்றும் சேர்த்துக்கொள்ள வேண்டியதாக இருக்கிறது. என் இலக்கிய அனுபவத்தை எடுத்துச் சொல்லி, கூடிய வரையில் ஒரு இலக்கிய சிருஷ்டி வரையில் அந்த அனுபவத்தை அலசியும் பார்க்க முயலுவதுதான் என் இலக்கிய விமரிசனத்தின் அடிப்படைக் காரியம். இதிலே பிறருக்கு உகந்ததாகச் சொன்னேனா என்பதோ, முன்கூட்டியே முடிவான ஒரு தீர்மானத்துக்கு வந்தோமா என்பதோ என் கவலையில்லை. என் அனுபவ உண்மையைப் பூரணமாகச் சொல்லியாகிவிட்டதா என்பதுதான் எனக்குக் கவலை. பூரணமாகச் சொல்லவில்லை என்று தோன்றுகிறபோது உட்கார்ந்து மறுபடி முயன்று எழுதிப் பார்க்க வேண்டியதுதான்.

விமரிசனத்தில் அனுபவத்தை அலசிப் பார்க்கிற காரியம் இருக்கிறதே—அது எப்போதுமே சரியாக வராது. அதுவும் ஆரம்ப தசையில் விமரிசனம் எழுதப்படும் தோரணையில (ஆமாம, எழுதப் பழகும் தோரணைதான் இன்னமும், இருபது வருஷ இலக்கிய விமரிசன அனுபவத்துக்குப் பிறகும் நாம் செய்து கொண்டிருக்கிறோம் என்று எனக்குத் தோன்றுகிறது.) அலசிப் பார்க்கிற காரியத்தை tentative ஆகத்தான், பூனைக்குட்டி தனது காலை நீட்டி எதிரில் உள்ளது என்ன என்று பார்க்கிற தோரணையில்தான், செய்ய முடியும் என்றும் எனக்குத் தோன்றுகிறது.

இலக்கியத்தில் உள்ள மற்ற துறைகளைப் போலவே இலக்கிய விமரிசனத்தையும் ஒரு அளவுக்குக் கலையாகவும், ஒரு அளவுக்கு சாஸ்திரமாகவும் எண்ணுகிறேன் நான். இலக்கிய விமரிசனத்தை விஞ்ஞானமாக, ஒரு சாஸ்திரமாகப் பயிலுவது சுலபமாகவே எல்லோருக்கும் கைவந்துவிடும். ஆனால் இலக்கிய விமரிசனத்தைக் கலையாகப் பயிலுவது சுலபத்தில் கைகூடி வந்துவிடுகிற காரியம் அல்ல. இலக்கிய விமர்சனத்தைக் கலையாகப் பயிலுகிற காரியத்தை இப்போதுதான் தமிழ் ஆசிரியர்களில் சிலர் செய்யத் தொடங்கியிருக்கிறார்கள். தமிழ் இலக்கியத்தில் வளம் தொடர்ந்து ஏற்படுவது என்பது இந்த இலக்கிய விமரிசனக் கலை வளர்ந்து மேஜராவதைப் பொறுத்தே இருக்கிறது என்றும் எனக்குத் தோன்றுகிறது.

இலக்கியத்தில் இன்னும் சோதனைகளும் முயற்சிகளும் 'மேலே மேலே' என்று செய்து கொண்டே போவதற்கு இலக்கிய விமரிசனம்தான் சிறப்பாக வழிகாட்ட வேண்டும் என்று நான் எண்ணுகிறேன். குறிப்பிட்ட ஓரிரண்டு துறைகளில், குறிப்பிட்ட ஒரு காலப் பகுதியில், வளம் ஏற்பட்டிருக்கிறது. ஆனால் இந்த வளம் உரம் பெறவும், மேலும் வளர்ச்சி சாத்தியமாகவும், இலக்கிய விமரிசனம் உடனடியாகத் தேவை. 1948-க்குப் பிறகு இலக்கியம் (தமிழைப்பற்றிய வரையில்) தேங்கிப்போனதற்குக் காரணம் வளத்தை அளவிடக்கூடிய தெம்பு படைத்த இலக்கிய விமரிசனம் தோன்றாமைதான் என்று எனக்குத் தோன்றுகிறது.

இலக்கிய விமரிசனம் தோன்றிவிட்டால் தானே இலக்கிய வளர்ச்சி தோன்றிவிடுமா என்று கிண்டலாகக் கேட்கிற சந்தேகப்பட்ட

வர்களுக்கு ஒரு பதில் சொல்லலாம். இலக்கிய விமரிசனம் தோன்றினால், இலக்கிய வளத்துக்கான சூழ்நிலையையும், இலக்கிய சோதனைகள் நடத்துவதற்கான தெம்பையும் சிருஷ்டித்துத் தந்துவிடும். அந்தத் தெம்பும் சூழ்நிலையும் காரணமாகச் சிலர் புது இலக்கியம் சிருஷ்டிக்கலாம். பலர் எழுதியும் உயர் இலக்கியம் சிருஷ்டியாகாமல் போனால், அது பற்றி வருத்தப்பட வேண்டியதில்லை. ஏனென்றால் இலக்கியம் என்கிற அளவில் ஒவ்வொரு ஆசிரியனும் தன்னில உள்ளதில் சிறந்ததைப் பூரணமாகத் தருகிறான். சட்டியில் இல்லாதது அகப்பையில் வராது. அந்தப் பூரணமும் இலக்கிய சிருஷ்டிக்குப் போதுமானதாக இல்லாவிட்டால் என்ன பண்ணுவது? எதுவும் செய்வதற்கில்லை—காத்திருப்பதைத் தவிர, என்றுதான் சொல்லவேண்டும்.

இலக்கியத்திலுள்ள பல துறைகளில், சிறுகதைபோல, நாவல்போல, கதைபோல, இலக்கிய விமரிசனமும் ஒன்று என்பதனால், இலக்கிய விமரிசனத் துறைவளருவதால் இலக்கியமும் வளருகிறது என்பது ஏற்படுகிறது. இது இலக்கிய விமரிசனத்தின் தேவை அடிப்படையை வற்புறுத்துகிறது. இரண்டாவதாக, இலக்கிய விமரிசனம், நல்லது என்று தோன்றுவதை அழுத்தமாக எடுத்துச் சொல்லி, நல்லதல்லாததைக் கண்டித்து இலக்கிய உழு நிலத்தில் களை பிடுங்கி நிலம் திருத்தித் தருகிறது. மூன்றாவதாக, இலக்கிய சிருஷ்டிகளிலே ஒரு கோணத்தை, ஒரு நோக்கத்தை மட்டும் கண்டு திருப்தியடைந்து விடுவதுடன் நின்றுவிடாமல், வாசகன் பல கோணங்களையும், பல நோக்கங்களையும் இனங் கண்டு அனுபவிக்க இலக்கிய விமரிசனம்தான் வழி வகுத்துத் தரவேண்டும். நாலாவதாக, சோதனை அம்சங்களுக்கு இலக்கியத்தில் அழுத்தம் தந்து சோதனைகளை மேலே மேலே செய்துகொண்டு போவதையும் இலக்கிய விமரிசனம்தான் சாத்தியமாக்க முடியும். ஐந்தாவதாக, ஆறாவதாக, என்றும் சொல்லிக் கொண்டு போகலாம். அவசியம் இல்லை என்றே நம்புகிறேன்.

புதுசாக எழுதத் தொடங்குகிறவர்களை அநுதாபத்துடன் அணுகிப் பரிவுடன் விமரிசனம் செய்யவேண்டும் என்று நமக்குள்ளே ஒரு சித்தாந்தம் தோன்றி உள்ளது. இது அசட்டுச் சித்தாந்தம். எந்த இலக்கியாசிரியனுக்கும், இலக்கிய சிருஷ்டி சம்பந்தமாகப் பரிவோ, யாருடைய அநுதாபமோ தேவையில்லை. பரிவும், அநுதாபமும் தேவையாகி, 'ஐயோ பாவம்!' என்று எண்ணவேண்டிய எழுத்து எழுத்தாகவே பலமுள்ளதாக இராது என்பது ஒரு அடிப்படைக் கருத்து. அது இலக்கியம் ஆகவே முடியாது. நான் எழுதியது இலக்கியமானால் ஆயிரம் பேர் பரிவு காட்டாவிட்டாலும் இலக்கியம்தான்; இலக்கியமல்லவானால் ஆயிரம் பேர் வோட்டு எத்துச் சொன்னாலும். பரிவு காட்டிப் புகழ்ந்தாலும் இலக்கியமாகிவிடாது. காலதேவனைப்போல பரிவு இல்லாத ஒரு புருஷனைக் காண இயலாது, காலதேவனின் பரிவில்லாமை இலக்கிய விமரிசகனுக்கும் தேவை. இன்றைய இலக்கியத்தை மதிப்பிடுகிற இலக்கிய விமரிசகன் ஓரளவுக்குக் காலதேவனின் காரியத்தைத்தான் செய்ய முற்படுகிறான். அதைப் பரிவு என்பதே காட்டாமல் செய்தேதான் தீர வேண்டும்.

எழுதப்படுவதெல்லாமே எழுத்து என்றும் பத்திரிகைகளில் வந்துவிட்டதெல்லாம் இலக்கியம் என்றும் ஒரு எண்ணம் தமிழிலே இரண்டு தலைமுறைகளாக நமக்குள் நமக்கே வளர்த்துவிட்ட ஒரு சித்தாந்தம். இந்த நிலை மாற இலக்கிய விமரிசனம்தான் உதவ முடியும். சர்க்கார் சார்பு பெற்ற ஸ்தாபனங்களும, சர்க்கார் சார்பு அவ்வளவு இல்லாத ஸதாபனங்களும் இலக்கிய ஸ்தாபனங்கள் என்று எண்ணி நாம் ஏமாறுகிறோம். அவை வேறுஎன்னவோ, எப்படியோ—நமக்கு மட்டும் என்ன, வேறு யாருக்குமே தெரியாது. ஆனால் ஒன்றுமட்டும நிச்சயம். இவற்றிற்கும் இலககியத்திற்கும் ஸ்நானப் பிராப்திகூடக் கிடையாது என்பதை உணர இலக்கிய விமரிசகன்தான் இன்று வழி செய்து தரவேண்டியதாக இருக்கிறது. அவற்றின் காரியங்கள் இன்று நம் எழுத்தைப பெரிதும் பாதிக்கின்றன—அபபடிப் பாதிக்க வேண்டிய அவசியம் இல்லை என்று எடுத்துச் சொல்லியே தீரவேண்டும். இன்றைய இலக்கியத்தில் பத்திரிகை ஆதிக்கம், பண்டிதர் ஆதிக்கம் இரண்டிற்கும் இலக்கிய ரீதியில் ஒருவித முக்கியத்துவமும் இல்லை என்பதையும் நமக்கு நினைவுபடுத்திக்கொண்டே இருக்க நமமிடையே இலக்கியத்தின் தனித்தன்மையின் காவலாளனாக இலக்கிய விமரிசகன் பணிபுரிய வேண்டியதாக இருக்கிறது.

இத்தனையும் சொன்ன பிறகு, வாசகர்களுக்கும் நல்ல எழுத்துக்கும் உள்ள உறவு முறைகளையும், அவற்றின் அடிப்படைகளையும் இலக்கிய விமரிசனம் ஆராயப் பயன்பட வேண்டும். உண்மையான இலக்கிய சிருஷ்டி காரியத்தில் இலக்கியம் சுய அனுபவமாக, ஆத்ம திருப்தி ஒன்றையேதான் லக்ஷியமாகக் கொண்டு தோன்றுகிறது என்பதையும், அதிர்ஷ்டவசத்தால் வாசகன் என்று சொல்லப் பட்டவன் அந்த இலக்கியத்தை ஒட்டுக் கேட்டு ஆனந்திக்கும் பேற்றைப் பெறுகிறான் என்பதையும் வற்புறுத்தவேண்டிய அவசியம் இன்று இலக்கிய விமரிசகனுக்கு ஏற்பட்டிருக்கிறது. இலக்கிய கர்த்தாக்களான, வால்மீகியும், வியாசரும், ஹோமரும், டான்டேயும் அதிர்ஷ்டசாலிகள். மறைவில், தனிமையில், ரகசியத்தில், ஒதுங்கி நின்று இலக்கிய சிருஷ்டி செய்வது, யார் கண்ணிலும் படாது நால

## அமைதி

ஒவ்வொரு இரவும்
ஒளியின் அமைதி

ஒவ்வொரு விண்மீனும்
வானத்தின் அமைதி

ஒவ்வொரு சொல்லும்
மோனத்தின் அமைதி

ஒவ்வொரு பாட்டும்
அன்பின் அமைதி.

க. நா. சுப்ரமண்யம்.

---

இயற்றுவது அவர்களுக்குச் சாத்தியமாக இருந்தது. இன்று தான் எனும் தனிமை நிலைகூட இல்லாமல், பத்திரிகை எழுத்தாக. முற்போக்கு எழுத்தாகத்தான் இலக்கிய சிருஷ்டி நடைபெறுகிறது. இலக்கியாசிரியனின் கடமை வாசகனை எட்டுவதலல; அதற்கு எதிர்மாறாக வாசகனின் கடமைதான் ஆசிரியனை எட்டிப் பிடிப்பது என்பதை வற்புறுத்த இன்று இலக்கிய விமர்சனம் உபயோகப்பட வேண்டும். இலக்கிய ஆசிரியன் வாசகர்களையோ ஒரு லக்ஷிய வாசகனையோ எண்ணிக் கொண்டு எழுதுவதில்லை. வாசகன் தான் தன் இலக்கியத்தாகத்தில் 'தமக்குகந்த ஆசிரியன் இவன்' என்று தேடிக்கொண்டு இடைவிடாமல் ஓடவேண்டும் என்பதை ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் இலக்கிய விமரிசனம் வாசகர்களுக்கு அடித்துச் சொல்லவேண்டும். ஷேக்ஸ்பியரைப் படித்தனுபவிக்க முடியாதவன் துரதிர்ஷ்டசாலி. கிரேக்க சோக நாடகாசிரியர்களை அனுபவிக்க முடியாதவர்களும் துரதிர்ஷ்டசாலிகள் தான். கம்பனைப் படித்தனுபவிக்க அறியாதவன் துரதிர்ஷ்டசாலி தான். வேறு என்ன? ஆனால் இதை இன்றைய இலக்கியக் கர்த்தாக்கள் வரையில் கொணர்ந்து 'புதுமைப்பித்'தனையும், 'மௌனி'யையும், லா. ச. ராமாமிருதத்தையும், கு. அழகிரிசாமியையும் (சிறுகதைகளில் மட்டும் சொல்லுகிறேன்) அனுபவிக்கத் தெரியாதவர்களைத் துரதிர்ஷ்டசாலிகள் என்று கூற இன்றைய இலக்கிய விமரிசகன் தயங்கக்கூடாது.

காலதேவனின் நிர்த்தாக்ஷண்யத்துடன், பரிவு என்பதே காட்டாமல்தான் இலக்கிய விமரிசனம் செய்தாகவேண்டும். இன்று எண்ணாயிரம் பேர்வழிகள் சிறுகதைகள் என்று எழுதுகிறார்கள் என்றால், எண்ணாயிரம் பேர்வழிகளும் இலக்கியக் கர்த்தாக்கள்தான் என்கிற எண்ணம் நம்மிடையே பலருக்கும் ஏற்பட்டிருக்கிறது. இந்த எண்ணாயிரம் பேர்வழிகளில் அதிகம் சொல்லப்போனால் ஒரு எண்பது பேர்வழிகள் நன்றாகவே எழுதலாம். மொழி வளத்தையும் அடிப்படையாகக் கொண்டு படிக்கக்கூடிய கதைகள் எழுதலாம். ஆனால் காலம் என்கிற சல்லடை இதில் ஒரு எட்டுப்பேரையாவது சலித்தெடுத்து அடுத்த தலைமுறைகளுக்குத் தருமா என்பது சந்தேகமே! எட்டு என்று நான் இலக்கிய விமரிசகனாக எண்ணிச் சொல்கிற கருத்து. காலதேவனின் பரிவு - அல்லது பரிவில்லாமை என்பதனால் மூன்று, இரண்டு, ஒன்று என்று கூடத் தேய்ந்துவிடலாம்தான். இந்த எட்டுப் பேரிடம் இலக்கியத் தரம் இருக்கிறது என்று சொல்லுகிற மூச்சிலேயே எனக்கு எட்டுகிற வரையில் என்றும் சேர்த்துச் சொல்லவேண்டியதாக இருக்கிறது. இந்த எட்டுப் பேரைப் பற்றியும் காலம்தான் முடிவாகச் சொல்ல வேண்டும், சொல்ல முடியும்.

அப்படியானால் வாசகனை அடியோடு மறந்துவிட்டு எழுதுகிறவர்கள்தான் சிறந்த எழுத்தாளர்களா என்று ஆணித் தரமாகக் கேட்டு, அதற்குப் பிறகு வெற்றிகாமாகவே, அப்படியானால் எழுதியதைப் பிரசுரிப்பானேன்? ஆத்ம திருப்தியுடன் முடிந்துவிட்டது என்று கிழித்துப் போட்டுவிடக்கூடாதோ? என்று பதில் சொல்லமுடியாத கேள்விகள் கேட்பார்கள் சிலர் என்பது எனக்குத் தெரியும்.

ஆனால் உண்மை இதுதான். இலக்கியம் சிருஷ்டியாகிற சமயத்தில் ஆசிரியனுக்கு மட்டுமே அது சொந்தமான விஷயம். சமூகம் தனி மனிதனின் வளர்ப்பு, பயிற்சி, சூழ்நிலை. குடும்பம், அவன் மதம், கொள்கைகள், அவன் இனத்தவரின் ரத்த அருவியோட்டம், வாசனை எல்லாமாகச் சேர்ந்துதான் அவனுடைய சிருஷ்டியை ஓரளவுக்கு உருவாக்குகின்றன என்பது உண்மையே ஆனால் இதெல்லாம் சேர்ந்துவிட்டதனால் மட்டும் இலக்கியம் உற்பத்தியாகி விடுவதில். இந்த விஷயங்களையெல்லாம் வைத்து எத்தனைதான் அலசிப் பார்த்தாலும், இதெல்லாவற்றிககும அப்பாற்பட்ட ஏதோ ஒன்று எல்லா இலக்கிய சிருஷ்டியிலேயும் காணக் கிடக்கிறது. அந்த ஒன்றைத்தான் இலக்கியாசிரியனுக்கே சொந்தமான தனிவிஷயம் என்று நான் சொல்வேன். இந்தத் தனித்வம் என்கிற தத்துவம் இருக்கிறதே, அது, பரம்பொருள் என்று நம் முன்னோர்கள் சொன்னார்கள் அதைப்

(தொடர்ச்சி 29-ம் பக்கம்)

# பட்டியல்கள்

அசோகமித்திரன்

இந்த ஆண்டுக் குடியரசுத் தினத்தன்று சென்னையில் ஒரு கருத்தரங்கு நடைபெற்றது. 'கைராலி ஸ்டடிசர்க்கிள்' என்னும் குழு, நான்கு தென்னிந்திய மொழிகளின் தற்கால இலக்கியம் பற்றிக் கட்டுரைகள் படிக்க ஏற்பாடு செய்திருந்தது. கட்டுரையாசிரியர்கள் நான்கு பேருமே சிறிது கடுமையான விவாதத்திற்கு உட்பட வேண்டியிருந்தது. தெலுங்கு மொழிக் கட்டுரையை ஒரு அன்பர் வெகுவாகக் குறை கண்டார். தெலுங்கு மொழி புரட்சிகர எழுத்தாளர்களின் படைப்புகளுக்குப் போதிய கவனமும் முக்கியத்துவமும் தராதது குறித்துக் கண்டனம் தெரிவித்து, புரட்சிகர எழுத்தாளர்களின் நோக்கங்களைக் கட்டுரையாசிரியர் பூரணமாகப் புரிந்து கொள்ளப் புரட்சிகர எழுத்தாளர் சங்கத்தின் பிரகடனத்தின் சில பகுதிகளை உன்னிப்பாகப் படிக்குமாறு வற்புறுத்தினார். கட்டுரையாசிரியர் கண்டனங்களுக்குப் பதில் அளித்தார். திருப்திகரமாகப் பதில் கூறினாரா என்று கூற முடியாது. ஆனால் அவர் கூறிய பதில் ஒன்று சிந்தனைக்குரியது: "எந்தப் பிரகடனம்தான் மிக உன்னத நோக்கங்களை எடுத்துக் கூறாமல் இருக்கிறது?"

இலக்கியச் சங்கம், மக்கள் எழுத்தாளர் சங்கம், படைப்பாளிகள் குழாம், இலக்கிய வாசகர் வட்டத்திலிருந்து திறனாய்வு மன்றம், தமிழ் எழுத்தாளர் சங்கம், சென்னைத் தமிழ் எழுத்தாளர் சங்கம், சாகித்ய அகாடமி, தமிழ் வளர்ச்சி வரலாற்றுக் கழகம், இலக்கியச் சிந்தனைவரை இவ்வமைப்புகளின் இலக்கியக் கோட்பாடுகள் மிகவும் உன்னதமானவையே. அதேபோல விமரிசகர்கள் ரகுநாதன், சி. சு. செல்லப்பா, எழில் முதல்வன், வெ. சாமிநாதன், டாக்டர் ந. சஞ்சீவி, தி. க. சி., டாக்டர் கைலாசபதி இவர்களின் அடிப்படை இலக்கியக் கொள்கைகளும் உன்னதமானவையே. எழுத்து கலையாக உருக்கொள்ள வேண்டும். அது மனிதாபிமானத்தில் எழுந்ததாக இருக்க வேண்டும், மன விரிவை உண்டு பண்ணுவதாக இருக்க வேண்டும், கற்பனை மயக்கங்களைத் தவிர்ப்பதாக இருக்க வேண்டும், மனித ஆன்மிக எழுச்சிக்கு வழி கோலுவதாக இருக்க வேண்டும், சமூகப் பரிணாமத்திற்கு வலுவூட்டுவதாக இருக்கவேண்டும்— இதிலெல்லாம் ஒரு குறையும் காண முடியாது. அநேகமாக எல்லாருமே இந்த அடிப்படைக் கொள்கைகளைத்தான் அளவு கோலாகக் கொண்டிருப்பதாகக் கூறுகிறார்கள். இதன்படிப் பார்த்தால் இவர்கள் அனைவரும் ஏகோபித்ததாகத்தான் ஒரு குறிப்பிட்ட படைப்பைச் சிறந்ததென்றும் இன்னொன்றைச் சிறந்தது அல்ல என்றும் கூற வேண்டும். ஆனால் நடைமுறையில் அவ்வாறில்லை. ஒருவர் நல்ல படைப்பு என்று கூறியது மற்றொருவரால் மிகவும் இழிவானது என்று தள்ளி விடப்படுகிறது. ஒருவர் ஒரு எழுத்தாளரைச் சிறந்த எழுத்தாளர் என்று தேர்ந்தெடுத்தால் அது இன்னொருவருடைய தேர்வுக்கு முற்றிலும் முரண்பட்டதாக இருக்கிறது. ஆதலால் அரசியல் அல்லது சமூக அமைப்புகளின் பிரகடனங்கள் போல இலக்கிய விமரிசகர்களின் அடிப்படைக் கொள்கைகளும் அளவு கோல்களும் உன்னதமாக இருந்தபோதிலும் அவை செயல்படுத்தப்படும் முறையில் அந்த அமைப்பு அல்லது அந்த விமரிசகரின் தன்மை வெளிப்பட்டுவிடுகிறது. இன்னும் பொதுப்படையான இலக்கிய நோக்குகளை, வெவ்வேறு காலங்களில் அறிஞர்கள் கூறிவிட்டுப் போன இலக்கணங்களை மட்டும் எடுத்துச் சொல்லி சர்ச்சை—கண்டனங்களுக்கு உட்படாமல் நல்ல பெயர் வாங்கிப் போகும் கட்டுரைகளையும், உரைகளையும் பல பத்திரிகைகளிலும், கூட்டங்களிலும் எதிர்காண முடிகிறது. ஆனால் இன்றைய வாழ்க்கையில் இந்த நோக்கங்கள், கொள்கைகளின் பொருத்தம், குறிப்பிட்ட படைப்புகள்—படைப்பாளிகளைப் பொறுக்கி எடுத்துக் கூறுவதில் இருக்கிறது. இனங் கண்டு, தரம் பிரித்துக் கூறுவதில் இருக்கிறது. இத் திசையில், தமிழ் இலக்கியத் துறையில், சுமார் முப்பதாண்டு காலமாக ஒருவர் பெயர் தனித்து நிற்கிறது. அது க. நா. சு.

தமிழிலக்கியம் நசித்துக் கொண்டிருக்கிறது, சிறுகதை இலக்கியம் தேங்கிவிட்டது என்று பல பெரியோர்கள் அடித்துக் கூறும் இந்த ஆண்டிலும் பெயர் சொல்லிக் குறிப்பிடக்கூடிய முப்பது நாற்பது எழுத்தாளர்கள் போல, க.நா.சு.வும் சுமார் நாற்பதாண்டுகளுக்கு முன்னர், அவர் தமிழில் எழுத முன் வந்தபோது தன் வரையில் சுய விமரிசனம்

செய்து கொண்டு, தன் படைப்பு நன்றாக அமைய வேண்டும் என்ற ஒற்றைத்தட நோக்கத்துடன் தான் ஆரம்பித்திருக்க வேண்டும். க.நா.சு. நன்றாகவே எழுதினார். அன்றிலிருந்து இன்றுவரை அவருடைய படைப்பிலக்கிய எழுத்து ஒரு சீரான தகுதி படைத்ததாகவே இருந்து வந்திருக்கிறது. அவர் தனக்குக் குறைந்தபட்சத் தகுதியாக வைத்து வருவது மிக உயர்ந்த இலக்கியமாகவே இருந்து வருகிறது. அவர் பல மொழி பெயர்ப்புகளும் செய்திருக்கிறார். அவர் மொழி பெயர்ப்புக்காகத் தேர்ந்தெடுத்த படைப்புகளும் அவருடைய ஆராய்ந்துணரும் ஆற்றலுக்குச் சான்றாக இருக்கின்றன. அவர் படைப்பிலக்கியம் படைப்பதில் மட்டும் அன்றிலிருந்து இன்றுவரை கவனம் செலுத்தியிருந்தால் பொதுஜனப் பார்வையில் அவருடைய உருவம் இன்றுள்ளது போலப் பலவிதப் பிரதிவாத கோப, தாப, விரோத உணர்ச்சிகளைத் தோற்றுவிப்பதாக இருந்திருக்காது. வாதப் பிரதிவாத சர்ச்சைகளில் உட்படுத்தப்படாமல் இருப்பதில் நன்மை உண்டோ இல்லையோ, சௌகரியங்கள் பல உண்டு. ஆனால் க.நா.சு. சௌகரியங்களை நாடிச் சென்றதாகத் தெரியவில்லை. சர்ச்சைகளை, சர்ச்சைகள் மூலமாகப் பலரின் ஆழ்ந்த விருப்பு வெறுப்புக்களைத்தான்— நாடிச் சென்றிருக்கிறார். நாடிச் சென்றிருக்கிறார் என்று கூறுவதுகூடத் தவறாக இருக்கலாம். அவருடைய இயல்பு, அவருடைய இலக்கிய உணர்வு, அவருடைய விமரிசனங்கள் காரணமாக அவரைச் சர்ச்சைகளிடத்தில் தான் அழைத்துச் சென்றது.

க.நா.சு. தன் தேர்வுகளுக்கு, அவர் பொறுக்கி எடுத்த படைப்புகளுக்கு, அவை சிறந்தது, சிறந்ததல்ல என்று தான் நிர்ணயித்ததற்குக் காரணம் கூறாமல் இருந்ததில்லை. காரணங்கள் கூறுவதைப் பல வகைகளில் செய்யலாம். வெகு எளிதாக, படிப்போரும் உணரா வண்ணம் அவர்களுடைய உணர்ச்சிகளை லேசாகத் தூண்டித் தான் கூறுவதே சரி என்று ஒப்புக்கொள்ள வைக்கும் விதத்தில் செய்யலாம். இது பிரசாரகர்களின் வழி. ஆனால் க.நா.சு. விஞ்ஞான விளக்கங்களுக்குரிய மொழியில்தான் அவருடைய விமரிசனங்களைச் செய்திருக்கிறார். ஓரிலக்கியப் படைப்பு பல அம்சங்கள் கொண்டதாயிருப்பினும் அது வெற்றிகரமானதாக, அதை முழுமையாகப் பார்க்கும்போது அந்த உணர்வைத் தரவேண்டும். ஒரு கைகலப்பில் வெற்றி அடைந்துவிட்டு யுத்தத்தில் தோற்றுப் போவதற்குச் சமமாகும் ஒரு படைப்பு அதன் முழுமையில் வெற்றிகரமாக அமையாதது. க.நா.சுவின் விமரிசனப் பார்வையில் ஒரு படைப்பின் தனித்தனி அம்சங்கள் போதிய கவனம் தரப்படாமல் போவதில்லை. ஆனால் அவருடைய இறுதிக் கணிப்பில் அப் படைப்பு அதன் முழுமையில் எவ்வாறு அமைந்திருக்கிறது என்பதற்கு முதலிடம் கொடுக்கப்படுகிறது. இதைக் கூட ஒரு லௌகீக சாமர்த்தியத்துடன் செய்து நல்ல பெயர் வாங்கிக் கொண்டு போய்விடலாம்; அல்லது குறைந்தபட்சம், பொல்லாப்பு பெற்றுக் கொள்ளாமல் சமாளித்துவிடலாம். ஆனால் க.நா.சு. அவருடைய வாதங்கள், கணிப்புகளைக் கூறிவிட்டு அவைகளை விளக்கக் குறிப்பிட்ட படைப்புகள், படைப்பாளிகள் பெயர்களையும் எடுத்துக் கூறியிருக்கிறார். இன்னும் ஒரு படி மேலே போய் அவர்களை ரகவாரியாகப் பிரித்துப் பட்டியல்கள் போட்டிருக்கிறார்.

பட்டியல்கள் — இதை வைத்துத்தான் க.நா.சு. எவரிடமும் முதல் வசவை வாங்கிக் கொண்டிருக்கிறார். அவருடைய சக விமரிசகர்கள், எழுத்தாளர்களிலிருந்து தொடங்கி, ஒரு பத்திரிகை இதழ் வெளிவந்தால் அதன் அட்டவணையிலிருந்து கடைசிப் பக்கம்வரை உள்ளதை ஒவ்வொரு வரியில் வியந்து—பாராட்டி, திட்டி எழுதும் ஆர்வ வாசகன்வரை க.நா.சு.வின் பட்டியல்கள் உபாதைப்படுத்தியிருக்கின்றன. க.நா.சு. இப்போது எந்தப் பத்திரிகைக்கும் ஆசிரியராக இல்லை. பெரும் பரிசுகளும், பாராட்டுகளும் வழங்க அதிகாரம் படைத்த அமைப்பு எதிலும் அங்கத்தினர் இல்லை. சுத்த சாதாரணர். ஆனால் அவர் பட்டியல்களில் இடம் பெறுவதும் இடம் பெறாமல் போவதும் எழுத்தாளர்களுக்குள் மிகவும் பெருமை தருவதாகவும் மிகவும் அவமதிக்கப்படுவதாகவுமான விஷயமாகிவிடுகிறது.

'நகுலன்' ஒரு கவிதை எழுதியிருந்தார். அதன் வரிகள் முழுவதும் நினைவில் இல்லை. ஆனால் கவிதை இந்த முறையில் இருந்தது:

யார் இந்த
க. நா. சு.—
இவர் முறையாகத் தமிழ் படித்தவரல்ல.
இலக்கணம் இவரை மீறியது.
கவிதை இவருக்குக் கைவராத
கலை.
சிறுகதை நாவலோ சுத்தமாகப்
பிரயோசனம் இல்லை.
விமரிசனமோ – ஒழுங்காக
நான்கு வார்த்தை எழுதத் தெரியாது
மனுஷனுக்கு.
அது போகட்டும்,
இவர் என் கதை பற்றி என்ன
சொன்னார்?

இது ஏதோ ஒருவரைப் பாராட்டி, கெட்டிக்காரத்தனமாக எழுதிய கவிதையாகத் தோன்றவில்லை. நிதர்சனமாகக் காணக் கிடைக்கும் உண்மைதான். இல்லாது போனால் க.நா.சு. என்ன அபிப்பிராயம் சொன்னார், என்ன அபிப்பிராயம் வைத்திருக்கிறார் என்பது ஏன் இவ்வளவு தீவிரமான உணர்ச்சிகளைத் தமிழ் படைப்பிலக்கியத்தில் நேரடியாக, ஆத்மார்த்தமாக ஈடுபாடும் தொடர்பும் உள்ளவர்களுக்கு ஏற்படுத்த வேண்டும்?

தமிழில் க.நா.சு. பட்டியல்களை உபயோகப்படுத்தியது போல, தமிழுக்குப் பட்டியல்கள் தேவைப்படுவது போல, எல்லா மொழிகளுக்கும் பட்டியல்கள் பயன்படுத்தப்படுகின்றனவா என்று தீர்மானமாகக் கூறமுடியவில்லை. இலக்கிய வரலாறு என்று சிறிது விரிவாக எழுதப்படும்போதுதான் பட்டியல்களைக் காண முடிகிறது. ஆனால் தமிழ் நவீன இலக்கியம் சிறிது காலம் தாழ்த்தியே துவக்கம் கண்டதாலும், தமிழில் விமரிசனப் பூர்வமான கணிப்புகளை ஏற்றுக் கொள்ளக்கூடிய சூழ்நிலை ஸ்திரமாக இன்னும் உருவாகாத காரணத்தாலும் பட்டியல்கள் அத்யாவசியமாக இருக்கின்றன. பொதுப்படையான இலக்கிய விமரிசகன் சூத்திரங்கள், அல்லது கூற்றுகள், தற்கால படைப்பிலக்கியத்தைப் பொறுத்த வரையில், வாசகர்களுக்கு ஏதோ வாயுப் படலமாகப் போய்விடுகின்றன. விமரிசனக் கூற்றுகள், சூத்திரங்களுக்குத் திட்டவட்டமாக, ஸ்தூலமாக உதாரணங்களைக் கூறியே விளக்கவேண்டியிருக்கிறது. அப்போது பட்டியல்கள் தவிர்க்க முடியாததாகப் போய்விடுகின்றன.

ஒரு குறிப்பிட்ட தருணத்தில் க.நா.சு. தரும் பட்டியல், அப்படியே நூற்றுக்கு நூறு பூரணமானது என்று கொள்ள முடியாது. அவர் பார்வைக்குக் கிடைத்தவரை அந்தப் பட்டியல் முழுமையானது என்றுதான் கொள்ள முடியும். இதிலும் கூட, மனித இயல்பில் கூடிய ஞாபக மறதி, கவனக்குறைவு செயல்பட்டுச் சில பெயர்கள், சிலபடைப்புகள், ஒரு குறிப்பிட்ட க.நா.சு. விமரிசனத்திலோ கட்டுரையிலோ விட்டுப்போய்விட இடமிருக்கிறது. இருந்தும் க.நா.சு. ஒவ்வொரு கால கட்டத்திலும் பல கண்டுபிடிப்புகளைச் சாதித்திருக்கிறார். அவர் பார்வைக்குட்படுவது மற்ற தமிழ் விமரிசகர்கள், இலக்கிய அன்பர்களுக்குக் குறையாத வண்ணம் இருந்து வருகிறது. நாற்பதாண்டு காலமாக எழுதி மணிவிழா பெற்ற எழுத்தாளரின் சமீபத்திய படைப்பு பற்றியும் க.நா.சு.வால் அபிப்பிராயம் கூற முடியும். ஓராண்டு காலமாக நடக்கும் ஒரு சிறு பத்திரிகையில் ஒரு கதை எழுதி அடி எடுத்து வைக்கும் இளைஞனின் சாத்தியக் கூறுகள் பற்றியும் க.நா.சு.வால் கூறமுடியும். இன்று தமிழ் இலக்கிய உலகில் சிறப்பான பெயர்களாக இருக்கும் ஜெயகாந்தன், மௌனி, லா.ச.ரா., சுந்தர ராமசாமி, அழகிரிசாமி, ஹெப்சிபா ஜேசுதாசன், நீல பத்மநாபன், ஷண்முகசுந்தரம், நகுலன், வே மாலி, ஷண்முகசுப்பையா, சா. கந்தசாமி இவர்கள் எல்லோரும் ஒருவிதத்தில் க. நா. சு.வின் கண்டுபிடிப்புகளே.

க.நா.சு. இல்லாமலும் இவர்கள் நன்றாக எழுதியிருப்பார்கள், எழுதினார்கள். க.நா.சு. எடுத்துக் கூறுவதற்கு முன்புகூட இவர்களுக்கு உண்மையான ரசிகர்கள் இருந்திருக்கக்கூடும். ஆனால் க.நா.சு.வால்தான் இவர்கள் பற்றி விமரிசனப் பூர்வமாக ஒரு ரசிகர் பார்வை உண்டுபண்ண முடிந்தது. மௌனியின் கதைகளுக்கும் நீல பத்மநாபனின் 'தலைமுறைகள்' நாவலுக்கும் அப்படைப்புகளையும், அப் படைப்பாளிகளையும் சிறிதும் பிடிக்காததோர் மத்தியில் கூட அவை இலக்கியமேஎன்று ஒத்துக்கொள்ளக் கூடிய சூழ்நிலை இன்றிருக்கிறதென்றால், அது க.நா சு.வின் திட்டவட்டமான, முறையான வாதங்கள் நிறைந்த விமரிசனங்களால்தான். அதே போல, ஜனரஞ்சகத் தன்மையே இலக்கிய நயமாக என்றென்றும் நியதியாகிவிடும் தமிழ் எழுத்துத்துறை வரை என்று மலைப்பூட்டிய நாளில் அந்த ஜனரஞ்சகப் படைப்புகள் பற்றித் துணிவாகவும், திட்டவட்டமாகவும், அறிவுபூர்வமாகவும் எடுத்துக் கூறிய பெருமை க.நா.சு வுடையதுதான். அவர் அறிவு பூர்வமாகத் தன் கணிப்புகளை எடுத்துக் கூறுவது— அவைகளுக்கு மறுப்புக் கூற இடமில்லாமல் அவர் வாதங்கள் இருப்பதால்—எவ்வளவோ பேருக்கு கோபமூட்டியிருக்கிறது, கோபமூட்டுகிறது.

க.நா.சு.வுக்கு இப்படியும் ஒரு பெயர் உண்டு: அவர் இருப்பதும் இல்லாததுமாக ஆங்கிலத்தில் எழுதி, ஆங்கிலப் பத்திரிகைகளில் ஆதிக்கம் செலுத்துகிறார் என்று. க.நா சு. பல ஆங்கில வெளியீடுகளில் பல கட்டுரைகள் தற்காலத் தமிழ் இலக்கியத்தைப் பற்றி எழுதியிருக்கிறார். ஆனால் அந்த வெளியீடுகள் அவருக்கு மாறுபட்ட கருத்துகளை வெளியிடத் தடை விதித்ததில்லை. அவருக்குக் கண்டனம் தெரிவித்து எழுதியதுலன் கட்டுரையையும் வெளியிட்டிருக்கின்றன.

க.நா.சு. தடத்தில் இன்னொருவர் எழுதிய கட்டுரைக்குக் கடுமையாகக் கண்டனம் தெரிவித்த ஏ. சுப்பையாவின் கட்டுரையையும் வெளியிட்டிருக்கின்றன. தமிழ் இலக்கிய உலகைப் பற்றிக் க.நா.சு. ஒருவரால்தான் ஆங்கிலத்தில் எழுத முடியும் என்றில்லை. அவரைவிட அந்த மொழில் திறமையும் செல்வாக்கும் உள்ளவர்கள் பலர் இருக்கத்தான் செய்கிறார்கள். அவர்கள் எப்போதோ ஒரு முறை, அதுவும் க.நா.சு. ஆரம்பித்த ஒரு

சர்ச்சைக்குப் பதிலடி போலத்தான், எழுதியிருக்கிறார்கள்—ஆனால் தொடர்ச்சியாக, வருஷக் கணக்கில், அதுவும் முப்பதாண்டுகளுக்கும் மேலாக, அந்த கோபத்துடன், அதே தீவிரத்துடன் எழுதவில்லை.

குறிப்பாக அவர்களே ஒரு இலக்கியப் பார்வை அமைத்துக் கொண்டு அப் பார்வையைப் பிறருக்குத்தெரியப்படுத்துவதில்க.நா.சு கொண்டிருக்கும் அயராத தீவிரத்துடன் செயல்படவில்லை. பல ஆண்டுகள் தொடர்ச்சியாக ஒன்றில் தீவிரத் தன்மை கொண்டிருப்பது அந்த ஒன்றில் அந்த நபர் கொண்டிருக்கும் ஆழ்ந்த நம்பிக்கையையும், அக்கறையையும்தான் காட்டும். க.நா.சு வின் கருத்துகள், கணிப்புகள் எப்படியாயினும் தமிழ் இலக்கியத் துறையில் அவருக்குள்ள நம்பிக்கையையும் அக்கறையையும் முப்பதாண்டுப் பணியில் நிருபணம் ஆகியிருக்கின்றன. தமிழ் மொழியல்லாதோர் மத்தியில் தமிழ் இலக்கியம் கவனத்தையும் கணிப்பையும் பெற்று வருகிற தென்றால், அது க.நா.சு வும் அவர் போன்றோரும் தமிழ் இலக்கியம் பற்றி வேறு மொழிகளில் எழுதுவதால்தான். விஞ்ஞானப்பார்வை எல்லாத் துறையிலும் வளர்ந்திருக்கும் இந்த இருபதாம் நூற்றாண்டில் ஒருவர் முதன் முதலாக ஏதோ கூறியிருக்கிறார் என்பதால் மட்டும் அது நித்ய சத்யமாக ஏற்றுக் கொள்ளப்படுவதில்லை. ஆனால் ஒருவர் எடுத்துக் கூறுவதால் தான் அப்பொருள் பற்றி மேற்கொண்டு பரிசோதனை நடத்த ஒரு தளம் அமைகிறது. ஆதலால் முதன் முதலாக ஒன்றைப் பற்றி ஒருவர்கூறும் கருத்தும், கணிப்பும் முக்கியத்வமும், மதிப்பும் பெறத்தான் செய்கின்றன.

---

## பயணம்

அவசர மென்றாலும் கூட
நான்
ஏரோப்ளேனிலோ
எக்ஸ்பிரஸ் ரெயிலிலோ
பயணம் போவதை
விரும்ப மாட்டேன்.

கட்டுச் சாதம்
கட்டிக் கொண்டு,
போகும் வழியெலாம்
சண்டைச் சச்சரவுகள்
சல்லாபங்கள்
தொடர்ந்துவர
பயணம்
செய்வதே
பயணம்.

எந்தப் பயணமும்
பதினாலு ஆண்டுகளுக்குக்
குறைந்ததாக
இருக்கக் கூடாது.
அப்போதுதான்
ராமன்
அயோத்தி
திரும்ப இயலும்.

க. நா. சுப்ரமண்யம்.

---

கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டு பிடித்துவிட்டு ஸ்பெயின் திரும்பினார். அவருக்கு விருந்து. ஆனால் ஸ்பெயின் பிரபுக்களுக்குக் கொலம்பஸ் மீது மிகுந்த அலட்சியம். அந்த விருந்திலேயே அவர் காது கேட்க 'அப்படி என்ன பிரமாதமாக இவன் சாதித்துக் கிழித்துவிட்டான்!' என்று பரிமாறிக் கொண்டார்கள். கொலம்பஸ் விருந்து முடியும் தறுவாயில் ஒரு முட்டையை எடுத்துக் காட்டினார். "இந்த முட்டையை உங்களால் செங்குத்தாக நிற்கச்செய்யமுடியுமா?" என்று கேட்டார். பிரபுக்கள், சீமாட்டிகள் அனைவரும் விருந்து மேஜைமீது முட்டைகளைப் புரட்டிப் புரட்டிப் பார்த்தார்கள். இறுதியாக "நீ செய்து காட்டு, பார்ப்போம்" என்றார்கள். கொலம்பஸ் தன் கையிலிருந்த முட்டையின் ஒரு நுனியைச் சிறிது தட்டி விட்டார். முட்டை இப்போது செங்குத்தாக நின்றது. "இது என்ன பிரமாதம்?" என்றார்கள் பிரபுக்கள். 'முற்றிலும் உண்மை. ஒருவர் செய்து காட்டி விட்டால் அப்புறம் எதுவும் பிரமாதம் இல்லைதான்" என்று கொலம்பஸ் கூறினார்.

தற்காலத் தமிழ் இலக்கியத்தைத் தரம் பிரித்து இனம் கண்டுகொள்ள வாசகர்களுக்கு ஒரு சூழ்நிலை ஏற்படுத்துவதில், அளவிலும் தரத்திலும் தொடர்ந்து ஊக்கம் குன்றுமலிருத்தலிலும் க.நா.சு. ஆற்றிய பணிக்கு நிகராக இதுவரை யாரும் பணி புரியவில்லை. இந்த விதத்தில் அவர் துணையில்லாதவர். தனியர். அவருக்கு அறுபதாண்டு முடிகிறது. அதைக் காரணமாக வைத்துக் கொண்டு தமிழிலக்கியத்தில் ஈடுபாடு கொண்டவர்கள் எல்லோரும் இப்படிக் கணக்குப் பார்க்க ஒரு வாய்ப்பு ஏற்பட்டிருக்கிறது. ●

# என்னைப் பாதித்த சில நூல்கள்

க. நா. சுப்ரமண்யம்

பாதித்த என்கிற வார்த்தைக்கு என்ன அர்த்தம் என்பது பற்றி நேற்றுச் சிறிது விவாதம் நடந்தது. பிடித்த, ரஸித்த, பிடிக்காத, வெறுத்த, மனசைச் சிறிது தொட்ட, வாழ்க்கைப் போக்கையே மாற்றிய, அதிகமாக மாற்றாத என்றெல்லாம் அர்த்தம் சொல்லப்பட்டது. பாதிப்பு என்பதை influence என்கிற ஆங்கில வார்த்தையின் மொழி பெயர்ப்பாக, ஒரு இலக்கிய விமர்சனக் குறியீடாக ஏற்றுக் கொள்வது நல்லது என்று எனக்குத் தோன்றுகிறது. பாதிப்பு என்றால் கையைக் காலை உடைத்திருக்க வேண்டும் என்றோ, கண்களைக் குருடாக்கி இருக்க வேண்டும் என்றோ, உள்ளத்தைத் த்ரித்திருக்க வேண்டும் என்றோ அர்த்தப்படுத்திக் கொள்ள வேண்டிய அவசியமிருப்பதாகத் தெரியவில்லை. தவிரவும் இன்றைய அதிகப் பாதிப்பு நாளை தேய்ந்து மங்கி விடலாம்; அதனால் இன்று பாதிப்பு இல்லாது போய்விட்டது என்று ஏற்படாது.

நேற்று கட்டுரை படித்த என் மதிப்புக்குரிய நண்பர் ஆர். ஷண்முகசுந்தரம் தன்னை ஒரு நூலும் பாதித்ததில்லை என்று கூறினார். பாதிப்பு என்கிற வார்த்தைக்கு இலக்கிய விமர்சனக் குறியீடாக அல்லாமல் வேறு அர்த்தம் பண்ணிக் கொண்டதனால் அவர் அப்படிக் கூறினார் என்று எனக்குத் தோன்றுகிறது. எந்த நிமிஷமுமே நமது வாழ்வும், எழுத்தும், நாம் செய்கிற ஒவ்வொரு காரியத்தினாலும் பாதிக்கப்பட்டுத்தான் வருகிறது. ஒரு நூலைப் படிக்கும்போது நம் மனதில் எழுகிற சிந்தனைகள் எல்லாம் நம்மைப் பாதிக்கின்றன. நூல் முழுவதுமே ஓரளவுக்காவது worth while — "நல்ல" நூல் என்று சொல்லக் கூடியதானால் அது நிச்சயமாக நம்மைப் பாதிக்கத்தான் செய்யும். நல்ல என்கிற வார்த்தையை நான் Quotation markகில் போட்டிருக்கிறேன் நல்ல என்பதற்கும், தரமான என்கிற அர்த்தம் தராமல் இலக்கிய விமர்சனக் குறியீடாக அதை உபயோகிக்க வேண்டும் என்கிற அபிப்ராயத்தில் அப்படிச் செய்தேன். "நல்ல" அதாவது கெடுதல் செய்கிற சக்தி வாய்ந்த நூல்களாகப் பலவற்றைப் பற்றிப் பின்னர் சொல்லுவேன்.

பாதிப்பு–influence என்றால் plagiarism என்று அர்த்தம் பண்ணிக்கொள்வதும் தவறு. தாகூரில், சிறப்பாக ஆங்கிலக் கீதாஞ்சலியில் Robert Browning என்பவருடைய பாதிப்பு இருக்கிறது என்று சொல்வது குறித்து நேற்று ஒருவர் குறைப்பட்டுக் கொண்டார். அது குறைப்பட்டுக் கொள்ளும்படியான விஷயம் அல்ல. ஏனென்றால் பாதிப்பு–influence என்பது plagiarism — திருட்டு ஆகாது. அதே அர்த்தத்தில் Hardy என்கிற ஆங்கில நாவலாசிரியரின் பாதிப்பு - influence ஷண்முகசுந்தரத்தின் நாவல்களில் காணப்படுகிறது என்று சொல்வது குறையாகச் சொல்வது ஆகாது. அப்படி இலக்கிய பூர்வமாகப் பார்க்கும்போது, பிறரால் பாதிக்கப்படாத இலக்கியாசிரியர்களே கிடையாது என்றுதான் சொல்ல வேண்டும். பல நூலாசிரியர்களுடைய influence இல்லாத ஒரு நூலும், நாவலோ, கட்டுரைத் தொகுதியோ, கவிதைத் தொகுதியோ உலகத்தில் கிடையாது. எந்த சமயத்தில் influence என்பது மறைந்து plagiarism ஆகிறது என்பது இலக்கியாசிரியரின் தெரிந்த திருட்டுத் தனத்தைப் பொறுத்தது ஆகும் Plagiarism என்பது திருட்டுத் தனம்; அநியாயமானது. பாதிப்பு என்பது influence; நியாயமானது.

இவ்வளவும் பொதுவாகச் சொன்னேன். இவ்வளவும் தமிழில் இலக்கிய விமர்சனம் இன்றுள்ள நிலையில் சொல்ல வேண்டியது அவசியமாகிறது. ஓரளவு இலக்கிய விமர்சனப் பரிச்சயம் ஏற்பட்டுவிட்டால் இம்மாதிரி elementary observations — அரிச்சுவடிப் பாடங்களுக்கு அவசியம் இராது. அந்த அளவுக்கேனும், ஒரு குறிப்பிட்ட ஒரு சிலருக்கேனும் இலக்கிய விமர்சனப் பார்வையை உண்டாக்கித் தர இந்த மாதிரிக் கூட்டங்கள் உபயோகப்படும் என்கிற நிச்சயம் எனக்கிருக்கிறது.

இன்னொன்றும் இங்கு சொல்லுகிறேன். இந்தக் கூட்டம் நடத்துபவர்கள் விவாதங்கள் என்பன கண்டு ஒதுங்க வேண்டியதில்லை. இலக்கிய விமர்சனத்தில் அடிப்படைகள் விவாதங்களினால் ஆழம் பெறுகின்றன; அகலம் பெறுகின்றன; ஸ்திரம் பெறுகின்றன. விவாதத்தில்—எந்த விவாதத்திலுமே விஷயத்துக்குப் புறம்பான சில விஷயங்கள் அமபடத்தான் படும். விவாதம் விஷயத்தைவிட்டு நகருவதனால் சில நன்மைகளும் உண்டு.

அகராதியை ஒரு வார்த்தைக்கு அர்த்தம் பார்க்கப் புரட்டும்போது வேறு சில வார்த்தைகளும் கண்ணில் படும் என்பது போல.

இதுவரை பொதுவாக ஆயிற்று. இனி விஷயத்துக்கு வருவோம். என்னைப் பாதித்த நூல்கள் என்பது விஷயம்.

சற்றுமுன் நான் சொன்னேன், படிக்கிற எல்லா நூல்களுமே படிப்பவனை ஓரளவு பாதிக்கின்றன என்று. நான் நூல்களைச் சற்று அதிகமாகவே, அதாவது அதிகமான நூல்களைப் படிப்பவன். என் வாழ்நாளில் பெரும் பகுதியை நான் படிப்பதிலேயே செலவிடுகிறேன். பெரும் பகுதியை என்று சொல்வதைத் தெரிந்தே சொல்கிறேன். நான் தூங்குவதையும் விட அதிகமான பகுதி படிப்பதிலேயே செலவிடுகிறேன் என்பது உண்மையாகும். எனக்கு ஐந்தாறு மணி நேரத் தூக்கம் போதும் என்று ஒரு பழக்கம் என்னுடைய பதினைந்தாவது வயதில் S S L.C பாஸ் பண்ணியபோதே ஏற்படுத்திக் கொண்டு விட்டேன். ஆறைப் படிப்பது என்பது சாதாரணமாக சராசரிக் கணக்கில் ஒரு நாளில் எட்டுமணி நேரமாவது நடக்கிறது. இது குறைந்த பட்சம்.

மற்றவர்களைப் போல அல்லாமல் நான் மூல நூல்களைப் படிப்பதில், மறுபடியும் படிப்பதில், மறுபடியும படிப்பதில் ஆனந்தம் கொள்பவன். ஷேக்ஸ்பியரின் The T mpest, Macbeth, Measure for Measure மூன்று நாடகங்களையும், Sonnets தொகுதியையும குறைந்த பட்சம ஐமபது அறுபது தடவைகளாவது படித்திருப்பேன். Selma Lagar'of என்கிற ஸ்வீடிஷ் ஆசிரியையின் Gosta Berlings Saga என்கிற நாவலை ஆங்கில மொழி பெயர்ப்பில் இருபது தடவையாவது படித்திருப்பேன். Tolstoyயின் War and Peace என்கிற நாவலைப் "பெரிதாக இருக்கிறதே படிக்க முடியவில்லையே" என்று கவலைப் படுகிறவர்கள் இருக்கலாம். ஆனால் நான் ஒரு தடவையல்ல, இரண்டு தடவையல்ல, மூன்று தடவைகள் அக்ஷரம் விடாமல் படித்திருக்கிறேன் இப்படியே பல நூல்களைப் பற்றிச் சொல்லிக் கொண்டே போக முடியும் என்றால், Joseph and His Brothers என்கிற Thomas Mann நாவல், Tolstoyயின War and Peace அளவுக்குச் சற்றும் குறையாதது. அதையும மூன்று தரம் படித்திருக்கிறேன். ஒரு தரம் மூலத்தில் — ஜெர்மன் மொழியில் படித்திருக்கிறேன் — இரண்டாவது தடவையும் புஸ்தகம் கிடைத்தால் படித்து விடுவேன் என்றுதான எண்ணுகிறேன்.

சரி, ஆனால் எதற்காக இரண்டாம்தரம், மூன்றும் தரம் படிக்க வேண்டும என்கிற கேள்வி எழலாம். முதல் தடவை படிப்பதால் ஏற்படுகிற நிறைவு கூடுகிறது இலக்கியத் தரமான நூல்களால் என்பது எனது ரஸனை அனுபவம். எனது என்று சொன்னேன்; உங்கள் ரஸனை அனுபவம் அப்படித்தான் இருக்கவேண்டும் என்பதில்லை. இரண்டாந் தடவை படிக்க முடியாத ஒரு நூல் இலக்கியத் தரமான நூல் அல்ல என்பது எனது அடிப்படையான அபிப்ராயங்களில் ஒன்று; இரண்டாந் தடவை படிக்கும்போது ஒரு நூலில பல புது அம்சங்கள் கண்ணில் படவேண்டும், கருத்தில் உறைக்க வேண்டும் — அப்படிப் புதுசாக எதுவும் உறைக்காவிட்டால் அது தரமான நூல் அல்ல என்பதும் என் இலக்கிய அபிப்ராயங்களில் ஒன்றாகும்.

இலக்கியப் பிரக்ஞை என்பது எனக்குச் சற்று சீக்கிரமாகவே ஏற்பட்டது என்பதற்கு மூல காரணமாக என் தகப்பனாரைச் சொல்ல வேண்டும். அவர் இலக்கியப் பிரக்ஞையுள்ளவர். எனக்குப் படிக்கச் சொல்லித் தந்தார்.

நாலாவது பாரம் படிக்கும்போதே நான் Henry Fieldingனுடைய Tom Jones என்கிற நாவலை அவரிடம உரத்துப் படித்துக் காண்பித்தேன். Tom Jones என்பவன் (அல்லது வேறு யாராவதோ, பெயர் ஞாபகமில்லை) Madame Q ickly என்கிற ஒரு ஸ்திரீயின் படுக்கையில் தான் இருந்ததை உணருவதாக ஒரு அத்தியாயம் இருக்கிறது. Tom Jonesஸில். பதிமூன்று வயதான எனக்கு அதன் அந்தரங்கங்கள் — sex பகைப் புலம் - புரிந்திருக்க நியாயமில்லைதான். இருந்தும் நாவலைப் புரிந்து கொள்ளும்படியாகப பண்ணிவிட்டார் என் தகப்பனார். அதேபோல அதே வருஷம் Victor Hugoவின் Les Miserables, Thackerayயின் Vanity Fair, Dickensஸின் David Copperfield எல்லாவற்றையும் என் தகப்பனாரிடமே உரக்கப் படித்துக்காட்டும் பழக்கம் எனக்கு ஏற்பட்டுவிட்டது. இரவு சாப்பிட்டு விட்டு, எட்டு எட்டரை மணிக்கு வாசிக்க உட்கார்ந்தால் இரண்டு மணி வரையில் உரக்கப் படிப்பது, வேகமாகப் படிப்பது என்று வழக்கப்படுத்திக் கொண்டேன். இது சற்றேறக் குறைய மூன்று ஆண்டுகள் நடந்தது.

S S.L C. முடிப்பதற்குள் ஆங்கில நாவல் இலக்கியத்தில் சாதாரணமாக வழக்கத்தில் உள்ளது எல்லாவற்றையும் படித்து முடித்தாகிவிட்டது. S.S L.C. பரிட்சை எழுதி விட்டுக் கல்கத்தாவுக்குக் கோடை விடுமுறைக்குப் போனபோது Imperial Library யில் (இப்போது அதற்கு National Library என்று பெயர்) ஐரோப்பிய நாவலும், ஆங்கிலத்தில் அவ்வளவாக ஏற்றுக் கொள்ளப் படாத (ஏற்றுக் கொள்ளப்படாத என்றால் நம்மூர் கல்வி இலாகாவினால் ஏற்றுக் கொள்ளப்படாத) நாவலாசிரியர்களையும்

படிக்கத் தொடங்கினேன். ஒரு நாலைந்து வருஷத்திய கோடை விடுமுறையை இதற்காகக் கல்கத்தாவில் என் சித்தப்பா வீட்டில் செலவிடுவது என்றும் வழக்கப்படுத்திக்கொண்டேன். S.S.L.C. முடியுமட்டும் நாவல்கள் மட்டுமே படித்துவந்த நான் இந்த விடுமுறை நாட்களில் Complete Works என்று R L Stevenson, Jonathan Swift, அவ்வளவாகப் பலரும் அறியாத Thomas Nashe முதலியவர்களையும் படித்துக் கொண்டேன்—நானாகவே. இந்தக் காலத்தில் எனக்குக் கவிதை, நாடகம், தத்துவம், சரித்திரம் என்கிற இலக்கியத்துறை நூல்களும் மனத்துக்குகந்தவையாக இருந்தன.

நான் கோவைக் கல்லூரியில் என் Intermediate வகுப்பு இரண்டு வருஷம் படித்தேன். 1927—1929. அங்கே கல்லூரி லைப்ரரியில் கிடைத்த நூல்கள், Thackeray, Dickens, Trolope, Jane Austen, Lord Lytton என்று வரிசையாகப் படித்துக் கொண்டிருந்த சமயம் அந்தக் கல்லூரி Principal தனக்குகந்த நூல்களான Edgar Wallace, E. Phillips Oppenheim, James Storer Clonston போன்ற trash என்று சொல்கிற நூல்கள் ஒரு ஆயிரத்துக்கும் அதிகமாக வரவழைத்துவிட்டார். அவ்வளவையும் தினத்துக்கு மூன்று நான்கு புத்தகங்களாகப் படித்துவிட்டேன். இந்த trash நூல்களை College Libraryக்கு வரவழைத்ததற்காக, அந்த Principal சுதந்திரமான தலைமைப் பதவிக்கு (Independent Charge) லாயக்கில்லை என்று அவரை demote பண்ணிவிட்டார்கள். ஆனால் நான் படித்த மட்டும் லாபம்.

Intermediate படித்துக் கொண்டிருக்கும்போதே நான் எழுதவும் தொடங்கிவிட்டேன். அதுவரையில் கையிலகப்பட்டதை யெல்லாம் படிப்பது என்று வைத்துக் கொண்டிருந்த நான் சில நூல்களைப் பற்றிக் கேள்விப்பட்டும், தேடிப்பிடித்தும் படிக்கத் தொடங்கினேன். இப்படிப் படித்த நூல்களில் பெரும்பாலனவை ஐரோப்பிய இலக்கிய நூல்களாகும். Dante என்கிற மகாகவியின் காவியத்தைப் படிப்பதற்காக இத்தாலிய மொழியைக் கற்றுக் கொண்டேன்; Cervantes எழுதிய Don Quixote என்கிற நாவலைப் படிப்பதற்காக நான் ஸ்பானிஷ் கற்றுக் கொண்டேன்.

B. A. வகுப்பை அண்ணாமலை சர்வகலாசாலையில் படித்தேன். அங்கு இலக்கியம், தத்துவம், சரித்திரம், மனோதத்துவம் என்கிற நாலு பிரிவுகளிலும் நல்ல நூல்கள் பல இருந்தன. அவற்றில் பலவற்றையும் தேர்ந்தெடுத்துப் படிக்கத் தொடங்கினேன். அந்தச் சமயம் வரையில் நான் சம்ஸ்கிருத மாணவன். நான் அண்ணாமலை சர்வகலாசாலைக்குப் போய்ச் சேர்ந்ததற்கே காரணம் சம்ஸ்கிருத இலக்கணம்தான். அண்ணாமலையில் அப்போது இரண்டாவது மொழி தேவையில்லை சம்ஸ்கிருதம், தமிழ் இரண்டுமே படிக்காமல் பி. ஏ. பட்டம் வாங்கிவிடலாம். Chemistry என் Subject. ஆனால் ஒரு நாள் தற்செயலாக கா. சுப்பிரமணிய பிள்ளையின் பேச்சு ஒன்றைக் கேட்ட காரணமாக நான் கா. சு. பிள்ளையும், ஸ்வாமி விபுலாநந்தாவும், சோமசுந்தர பாரதியும் நடத்திய தமிழ் வகுப்புக்களில் போய் உட்கார்ந்துகொண்டு பாடங் கேட்பேன். பரிக்ஷை எழுதவேண்டிய அவசியம் கிடையாது; பாடம் எனக்காக மட்டுமே கேட்டுக்கொண்டதுதான். இதற்குள் இரண்டொரு கட்டுரைகள், கதைகள் என்னுடையது வெளிநாடுகளிலும் பிரசுரமாகிவிடவே காலேஜ் லெக்சரர்கள் அதிகமாக என்னைக் கட்டாயப்படுத்தி வகுப்புக்கு வரச்சொல்லமாட்டார்கள். Chemistry Classலுக்குப் போவேன்; மற்றபடி ஆங்கில வகுப்புக்களுக்கெல்லாம் போகமாட்டேன். ஆனால் அதற்காக Lecturers absent மார்க் பண்ணமாட்டார்கள்.

அதுவரையில் படித்த அளவில் பாதிப்பு என்று சொல்கிற அளவுக்கு எந்த நூலிலும் எனக்குப் பிரக்ஞை ஏற்பட்டதில்லை. ஆனால் எனக்கு மிகவும் பிடித்த நூல் என்று Laurence Sterne என்பவர் எழுதிய Tristram Shandy எனகிற நாவலைச் சொல்வேன். நாவல்தான்—ஆனால் சம்பவங்களே இல்லாத நாவல். ஒரு ஸ்திரீக்கு இடுப்பு வலி எடுத்துக் குழந்தை பிறப்பதற்கு முன் நாவல் முடிந்து விடுகிறது. நாவலில் விவாதத்திற்கான விஷயம் ஒரு ஸ்திரீ மருத்துவச்சியை அழைப்பதா அல்லது ஆண் மருத்துவனை அழைப்பதா என்பதுதான். Sterneனின் கலைத்திறம் மிகவும் உன்னதமானது என்று சொல்ல வேண்டும். சுவாரசியமான கதை அல்ல — ஆனால் எனக்கு மிகவும் சுவாரசியமாக இருந்தது. இன்றும் என்னால் இந்த நாவலை ரஸித்து அனுபவித்துப் படிக்க முடிகிறது. என் ரஸனையின் அஸ்திவாரத்தில் ஒரு அம்சமாக அமைந்துவிட்ட நாவல் இது என்று சொல்வேன்.

இதேபோல இன்னொரு புஸ்தகமும் என் உள்ளத்தைக் கவர்ந்தது. அது Rudyard Kipling எழுதிய Kim என்கிற நாவலாகும். அதை முதன் முதலாக நான் இண்டர்மீடியட் இரண்டாவது வருஷம் படித்துக் கொண்டிருக்கும்போது படித்தேன். அதே ஆண்டு நான் சில காலம் லாகூரில் தங்க நேர்ந்தது—விடுமுறை நாட்களில். இந்தியாவின் பின்னணியை ஆங்கிலத்திலும் சரி, இந்திய மொழிகள் எதிலும் சரி, Kim நாவலில் காண்கிற அளவிற்கு எந்தக் கதாசிரியனும் கொண்டு வரவில்லை. இன்னமும் என்றுதான் நான்

எண்ணுகிறேன். Kim என்கிற நாவலில் கல்கத்தாவிலிருந்து டெல்லி செல்கிற Grand Trunk Roadடில் ஒரு பகுதி வருகிறது. ஷஹாரான்பூர்பக்கம் என்று எண்ணுகிறேன். அந்தப் பக்கத்தில் நடந்து பார்க்க வேண்டும் என்று நடந்து பார்த்திருக்கிறேன். Kimமுக்குப் பிறகு Kipling எழுதிய எல்லாவற்றையும் படிக்க வேண்டும் என்கிற நினைப்பு ஏற்பட்டு அநேகமாக Kipling எழுதியதெல்லாவற்றையும் படித்திருக்கிறேன். ஆங்கிலத்தில Kiplingஐ விடச் சிறந்த சிறுகதாசிரியர் கிடையாது என்றுதான் இன்னமும் என் நினைப்பு. Irish, Americans excepted. இந்தியப் பகைப் புலத்தைச் சித்தரிக்க Kipling கையாண்ட உத்தி சாதுர்யத்தை நான் வியந்த அளவு இந்தியாவைப் பற்றி எழுதிய எந்த ஆசிரியரையும் நான் வியந்ததில்லை. Kipling தென்னிந்தியா பற்றி அதிகம் எழுதாதது எனக்கு மிகவும் பெரிய குறையாகவே இருந்தது என்றும் இங்கு குறிப்பிட விரும்புகிறேன். தாது வருஷத்துப் பஞ்சம் பற்றிய கதை ஒன்று மட்டும் எழுதியுள்ளார்.

பி. ஏ. வகுப்பில் எனக்கு ஷேக்ஸ்பியர் நாடகங்களில் இரண்டு பாடம் — Hamlet, Much Ado About Nothing இரண்டும். Much Ado எனக்குச் சொல்லிக் கொடுத்தவருக்கு ஆங்கில இலக்கியம் தெரியாது—ஈடுபாடும் கிடையாது. Hamlet சொல்லிக் கொடுத்தவர் ஒரு மகாராஷ்டிரக்காரர்; Khadya என்று பெயர். அவருக்கு ஆங்கில உச்சரிப்பே வராது. காஜுவலி, யூஜுவலி என்பார். ஆனால் அவர் ஒரு ஈடுபாட்டுடன் வகுப்பில் மூன்று தடவை Hamlet நாடகத்தை ஆரம்ப முதல் முடிவுவரை எங்களுடன் படித்தார். எதுவும் சொல்லித் தரவில்லை. அதனாலேயே நான் ஷேக்ஸ்பியரை ரஸிக்கக் கற்றுக் கொண்டேன். அதேபோல மற்ற மாணவர்கள் எல்லாம் ஷேக்ஸ்பியர் பற்றி Bradley எழுதியதைப் படித்துவிட்டுப் பரீக்ஷை எழுதினார்கள். நான் படிக்காமலே எழுதவேண்டும் என்று தீர்மானித்துவிட்டு எழுதினேன். இன்றுவரை Bradley படித்தது இல்லை நான். மூல நூல்களைப் படிப்பதில நான் காண்கிற இன்பம் என்னால் விமர்சன நூல்களில் காண முடிவதில்லை. அதனாலேயேதான் நான் விமர்சனத்தை ஓரளவுக்கு மேல செல்லப்பா செய்வது போலச் செய்யக்கூடாது என்று எண்ணுகிறேன். நாவல்களில் வார்த்தை விடாது என்னால் படிக்க முடிகிறது; விமர்சன நூல்களில் அப்படிப் படிக்க முடிவதில்லை என்று சொல்லிக் கொண்டு, என்னை மிகவும் பாதித்த முதல் விமர்சகரை என்று ஒருவரைப் பற்றிச் சொல்ல விரும்புகிறேன்.

அவர் பெயர் Ezra Pound. நான் பி. ஏ. வகுப்பில் படித்துக் கொண்டிருந்த சமயம், அவர் பெயரையோ, T.S. Elliot பெயரையோ எந்த College Lecturerரும் சொல்லமாட்டார்கள். நானாகக் கண்டு கொண்ட ஒரு ஆசிரியர்தான் Ezra Pound. அவர் ஆங்கில, அமெரிக்கப் படிப்புப் பற்றியும் நூல்கள் பற்றியும் சொன்ன பல விஷயங்கள் எனக்கு மிகவும் உகந்தவையாக இருந்தன. பிற்காலத்தில் நான் விமர்சனம் எழுதத் தொடங்குகிற போது என்னையும் அறியாமலே (அதாவது ஆரம்பகாலத்தில்) என் விமர்சன, இலக்கிய அபிப்ராயங்கள் எவ்வளவு தூரம் Ezra Pound என்பவரால் பாதிக்கப்பட்டிருக்கின்றன என்று உணரத் தொடங்கினேன். மேலெழுந்தவாரியாகச் சொன்னால், பண்டிதர், பேராசிரியர்கள் பற்றியும், முறையாகப் படித்து ரஸனையற்றுப் போனவர்கள் பற்றியும் நான் சொல்லுகிற பல விஷயங்களுக்கு Ezra Pound தான் பொறுப்பு என்று உணருகிறேன். பின்னர் நான் சந்தித்த டி. கே. சி. இதற்கு ஆதரவு தந்தார். நான் களம் மாற்றிச் சொல்கிறேன்—அவ்வளவுதான்.

Ezra Poundைப் படித்த பிறகுதான் T S Elliot, James Joyce, Wyndham Lewis என்கிற மூன்று ஆசிரியர்களையும் படிக்க ஆரம்பித்தேன். கருத்துக்களில் Ezra Poundம் உத்திகளில் James Joyceம் என்னை மிகவும் பாதித்திருப்பவர்கள். பின்னர் இந்தக் கோஷ்டியில் சேர்ந்தவராக W. B. Yeatsஸையும் படித்துக் கொண்டேன். Joyceசின் உத்திகள் எனக்கு உகப்பாக இருந்ததற்கு இன்னொரு காரணம், அவனுடைய பாணி ஓரளவுக்கு Lawrence Sterneனுடையது என்பதாகவும் இருக்கலாம். நான் தமிழில் சிறுகதைகள் எழுதத் தொடங்குகிறபோது Joyceசினுடைய Dubliners கதைகளை முன்மாதிரியாகக் கொண்டு நகராத, emotionless கதைகளைத் தான் எழுத முயன்றேன். எனக்கு Stream of Consciousness என்கிற கயிற்றரவு உத்தி அவ்வளவாகத் தமிழுக்கு ஏற்ற விஷயமாகப் படவில்லை; அதற்கு ஒரு வசன, வார்த்தை வளம் வேண்டும்; தமிழில் அது இன்னும் ஏற்படவில்லை என்று எண்ணுகிறேன். புதுமைப்பித்தன் கயிற்றரவு, நினைவுப் பாதை முதலிய சிறு கதைகளிலும், லா. ச. ராமாமிருதம் கொட்டுமேளம், பாற்கடல் போன்ற கதைகளிலும் கையாளுகிற அளவுக்குமேல் Stream of Consciousness உத்தி தமிழில் கையாள முடியாது என்றே நான் நினைக்கிறேன். சாதாரணமாக இந்த உத்திதான் Joyceசின் சிறப்பு என்று சொல்லுவார்கள்.

B. A. வகுப்பில் எனக்கு ஏதோ ஒரு பரிசு வந்தது. அதற்கு என் பேராசிரியர் Khadya "என்னென்ன புஸ்தகங்கள் வேண்டும்?" என்று கேட்டார். நான் சற்றும் தயங்காமல் Thus Spake Zarathustra — Nietsche எழுதிய ஒன்று, Walt Whitmanன Leaves of Grass இரண்டு என்றும் சொன்னேன்.

(தொடர்ச்சி பக்கம் 23)

# க. நா. சு.வின் இலக்கிய முதிர்ச்சியும் விமர்சனப் பாங்கும்

**நகுலன்**

க. நா. சு. வினால் பாதிக்கப்பட்டவர்களில் நானும் ஒருவன். அவருடன் எனக்குச் சுமார் ஒரு பதினைந்து வருஷப் பழக்கமுண்டு. அவருடன் நான் உள்ளங் கலந்து உறவு கொண்ட நாட்களை இப்பொழுது நினைக்கும் பொழுது, இதை எழுதும் இந்தப் பொழுதில் கூட, எனக்கு ஒரு மன நிறைவு உண்டாகிறது. எழுத்தாளர் என்ற நிலையில் அன்றி ஒரு தனி மனிதன் என்ற நிலையிலும் நான் அவரை மதிக்கிறேன். நவீன தமிழ் இலக்கியத்தின் வளர்ச்சிக்கு அவர் செய்திருக்கும் சாதனை — நாவல், சிறுகதை, கவிதை, விமர்சனம், நாடகம் என்ற பல்வேறு துறைகளில் குறிப்பிடத்தக்கது. இனி இக்கட்டுரையில் அவர் இலக்கிய முதிர்ச்சியைப் பற்றியும்(!) விமர்சனப் பாங்கு பற்றியும் (!!) ஒரு பரவலான பரிசீலனை செய்வதே என் நோக்கம்.

"எதற்காக எழுதுகிறேன்?" என்ற கட்டுரையில் க. நா. சு. வருமாறு எழுதியிருக்கிறார். "உலகத்தையும், உலகத்தில் நடப்பதையும் காட்சியாகக் கண்டு, சொந்த விஷயங்களையும் கூட ஈடுபாடில்லாமல், பற்றின்மையுடன், சாட்சி பூதமாகக் கவனித்துக் கொள்ள வேண்டும் என்பது வேதாந்தத்தின் லட்சியம். காண்பதையும் நடப்பதையும் உண்மையென்று நம்பி விடக் கூடாது என்பது அதன் நோக்கு. (அடிக்கோடிட்டிருப்பது நான்!) இந்த லட்சியம் கலை பற்றி, முக்கியமாக எழுத்துக் கலை பற்றி, எத்தனை தூரம் உண்மை என்பது சிந்தித்துப் பார்த்தால் தெரியவரும். மேலும் அவர் சொல்கிறார்: "எனது ஆன்மீகமான ஆனந்தத்தின் விளைவாக எழுதப்பட்ட என் கதைகளையோ, கவிதைகளையோ, நாடகங்களையோ, நாவல்களையோ யார் அங்கீகரிக்க மறுத்தாலும், அதனால் சமுதாயத்திற்கோ மற்றவர்களுக்கோ ஒரு லாபமும் இல்லை என்று யார் ஒதுக்கி விட்டாலும் எனக்கு இதைவிடச் சிறந்த அனுபவம் வேறில்லை— வேறு அவசியம் என்றும் நான் நினைக்கவில்லை." நான் தெரிந்து பழகின தமிழ் எழுத்தாளர்களில் அவரைப் போல் பரவலாகவும் ஆழமாக, ஆம், ஆழமாகவும் ரஸனை அடிப்படையில் உலக இலககியத்தில் ஒரு பரிச்சயம் உடையவரை நான் காணவில்லை. இங்கு ஒன்று சொல்ல வேண்டும். அவர் எதைப் படித்தாலும் அதைப் பற்றித் தீர்க்கமாகச் சிந்தித்துத் தனக்கு என்று ஒரு தனிப் பார்வையை வகுத்துக் கொள்கிறார். "இலக்கிய வட்டம்" 17—1—64 இதழில் "உலக இலக்கியம்—2" என்ற தலையங்கக் கட்டுரையில் அவர் வருமாறு எழுதுகிறார்: "நான் எழுதுவதற்கு எதுவும் படிப்பது அவசியமில்லை என்றே எனக்கு தோன்றுகிறது என்று சில ஆசிரியர்கள் சொல்வதை நான் கேட்டிருக்கிறேன். இது பற்றி இரண்டு அபிப்பிராயங்கள் சொல்லலாம். ஆனால் கலைக்கும் சிருஷ்டிக்கும் படிப்பு உதவுகிறது என்பது மறுக்க முடியாத உண்மை...... படிக்கப் பயிற்சி செய்து கொள்ளாத இலக்கிய ஆசிரியன் சில சமயம் மட்டமானதையும் உயர்ந்தது என்று எண்ணி ஏமாந்து விடுவான்; தன் எழுத்தில் மட்டுமில்லை மற்ற எழுத்திலும் தரம் பார்க்க அவன் அறியாது இருந்து விடுவான். அதற்காக வேனும் படிக்கப் பயிற்சி செய்து கொள்வது இலக்கிய ஆசிரியனுக்கும் நல்லது—மற்றவருக்கும் நல்லது." நான் பழகிய பல தமிழ் எழுத்தாளர்கள்—உலக இலக்கியத்தை விட்டுத் தள்ளுங்கள்—தங்கள படைப்புகளைப் பற்றி ஒரு பரவச நிலையில் பேசுபவர்கள் தமிழிலேயே பிறஎழுத்தாளர்களை அநேகமாகப் படிப்பதில்லை! தங்களைத் தாண்டி என்ன இருக்கிறது, இருக்கலாம் என்ற ஒரு போதை! இந்த வகையில் இயங்கும் எழுத்தாளர்களில் ஒவ்வொரு எழுத்தாளனும் ஏதோ ஒரு நல்ல நாவலை எழுதி விட்டுத் தான் தமிழ் இலக்கியத்தின்சிகரத்தை தொட்டு விட்டதாகத் தான் நினைக்கிறான்! க. நா. சு. இதற்கு விதிவிலக்கு. அவருடன் நான் பேசிய தருணங்களில் நான் ஏதாவது மாறான அபிப்பிராயத்தைச் சொன்னால் அதை கவனமாகக் கேட்பார்; அதில் சாரம் இருந்தால் ஏற்றுக் கொள்வார். நான் ஏதாவது அசம்பாவிதமாகச் சொன்னால் "இருக்கலாம். துரைஸ்வாமி. எனக்குச் சரியாகப் படவில்லை" என்று சொல்லிவிட்டு நகர்ந்து விடுவார். அவருடைய அபிப்பிராயத்தில் இலக்கியம் படைப்பதும் ஒரு தொழில்; மற்ற தொழில்களில் போல், இதற்கும் சுயமாக உள்ள ஒரு ஆற்றலைத் தவிரப் படிப்பு, கடினமான உழைப்பு இவை அவசியமென்று நினைக்கிறார். மேலும் அவர் "இலக்கிய வட்டம்" 24–4–64 இதழில் "இலககிய ரஸனை" என்ற தலையங்

கத்தில் வருமாறு எழுதுகிருர். "இலக்கியத்தில் இன்று உள்ளதை மட்டும் வைத்து ரஸனேயோ விமர்சனமோ கிடையாது. பாரம்பரியம், மரபு பூராவையும் வைத்துத் தான் விமர்சனமும் ரஸனையும் தோன்ற முடியும்." (அடிக்கோடு நான் செய்தது) இதே அடிபபடையில் தான் "இலக்கிய வட்டம்" 22—5—64 இதழில் "விமர்சனத்தின் நோக்கம்" என்ற தலையங்கக் கட்டுரையில் வருமாறு எழுதுகிருர்: "இலக்கிய விமர்சன ரீதியாகக் கவனிக்கும் போது கூட இலக்கியத்திற்கு அப்பாற்பட்ட விஷய கனத்திஞல் தான் ஒரு இலக்கியம், ஒரு நூல் நிலைக்கிறது என்று டி. எஸ். எலியட் போன்ற கவிஞர் விமர்சகர்கள் உணர்ந்து சொல்லத் தொடங்கியிருக்கிருர்கள்...... இந்த விஷய கனத்தை உணர்ந்து கொள்ள இந்திய சிந்தனை இந்திய விமர்சகனுக்கு உதவக் கூடும் என்பதே என் நம்பிக்கை. (அடிக்கோடு நான் செய்திருப்பது) மேலும் சொல்கிருர். "எனது அனுபவமும், அந்த அனுபவத்தில் ஆனந்தமும் எப்படி ஏற்படுகிறது என்று அறிந்து கொள்ளச் செய்யப்படுகிற முயற்சியை இலக்கியத்திலானல் விமர்சனம் என்றும், வாழ்க்கையிலாஞல் தத்துவ தரிசனம் என்றும் சொல்கிருேம். தெரிந்தோ தெரியாமலோ கடைபிடிக்கிற தத்துவம் மனிதஞகப் பிறந்து விட்ட ஒவ்வொருவனுக்கும அவசியமாகிறது. இங்கு குறிப்பிட்ட இவ்விரு அடிப்படைகளும் க. நா. சு. வின் படைப்பை நாம் சரிவரப் புரிந்து கொள்ள நமக்கு உதவும் என்றே நான் நினைக்கிறேன். இன்னும் ஒரு மேற்கோள் — அவர் "இலக்கிய விசாரம்" என்ற நூலிலிருந்து. "ஆனல் ஆழம் மனுஷ்யத்துவம் என்பது இலக்கியத்தின் ஆதார அடிப்படை அது காணப்படாத இலக்கியம் எந்த அழகிய உருவம் பெற்ருலும் போதாது என்று தான் சொல்ல வேண்டும்." க. நா. சு. வை ஒரு அளவு ஈடுபாடுடன் படித்தவர்கள் அவர் திரும்பத் திரும்பக் கீழ்வரும் வார்த்தைகளை இலக்கிய தாரக மந்திரங்களாக உபயோகிப்பது தெரிந்திருக்கும — ரஸனை, பூரணத்துவம், தனித்வம் இவைகள் யாவை என்பது நான் மேல் கொடுத்திருக்கும் தகவல்களிலிருந்து தெரிந்திருக்கும்.

இனி நான் அவர் நாவல்-சிறுகதை—கவிதைகளைப் பற்றி எனக்குத் தெரிந்தவரை என் அனுபவத்தை வைத்துக் கொண்டு சில சொல்ல விரும்புகிறேன். ஒரு கல்லூரி ஆசிரியா (!) என்ற வகையில் நான் எனக்குப் பிடித்த மாணவர்களிடம் அடிக்கடி இவ்வாறு சொல்வதுண்டு; "நீங்கள் கூடியவரை என் மனஓட்டத்தை, என் மனம் செயல்படுவதை அனுபவ பூர்வமாகத் தெரிந்து கொள்ள வேண்டும்." இதைப் புரிந்து கொள்வது என்பது வெறும் வார்த்தை மூலம் ஏற்படுவதில்லை; க. நா. சு. மதிக்கும் எழுத்தாளரான ராஜாராவ் என்பவர் "எழுத்தாளனும் வார்த்தையும்" என்ற ஒரு கட்டுரையில் வருமாறு எழுதுகிருர். "இன்னெருவருடன்" "பேச வேண்டும்" என்ற ஒரு "நிர்பந்தத்"திலிருந்து நாம் நம்மை விடுவித்துக் கொண்டாலன்றி, நாம் நம்மை மற்ெருருவருக்கு சுயரூபத்தில் காண்பித்துக் கொள்ள முடியாது." "ஒரு உபாசகனாக இருந்து கொண்டு என்னையே நான் அனுபவிக்க முடிந்தாலன்றி (இது ரசனை) சப்தத்தின் நித்தியம் பலிப்பதில்லை. இது இல்லாவிட்டால் அனுபவமும் சரி, சொல்லும் சரி, ஒரு வித உறவை ஏற்படுத்துவதில்லை; இந்த சாதனை இல்லாத இடத்தில் வார்த்தை வெறும் ஒலிக் குப்பை மாத்திரம்" "வார்த்தை என்பதே அடிப்படையில் சப்தம் என்பது நிசப்தத்தின் மூலமாக விளைவது" மேலும் அவர் வார்த்தை நம்மை மீண்டும் நிசப்தத்திற்குக் கொண்டு செல்கிறது என்கிருர். (இலக்கிய பூர்வமாக நான் இதை எழுத்தாளன—வாசகன் இருவரையும் உறவுபடுத்துவது என்பது ஒரு மக்களின் பண்பாடு மூலம் மனம்—மனத்துடன் ஐக்கியமாவது தான் என்று நினைக்கிறேன்) அதஞல் நாம் "வாசகர் வட்டம்", "வார்த்தை மூலம் அனுபவ பரிவர்த்தனை" என்பவை பற்றிப் பேச வேண்டாம் என்கிருர்! இந்தஅடிப்படையில் பார்க்கப் போனல் க. நா. சு. வின் உலகத்தை அதன் ரீதியில் அதைப் புரிந்து கொண்டு அது என்னை எவ்வாறுபாதித்திருக்கிறதுஎன்பதைத் தெளிவுபடுத்துவதே இலக்கிய விமர்சனம் செய்யக் கூடியது. க. நா. சு. வின் இலக்கிய முதிர்ச்சி என்பது இந்த விஷயம் என்பதை நான் உணர்கிறேன். இந்த முதிர்ச்சி க. நா. சு. வைப் பற்றிய வரை எவ்வளவு தான் உலக இலக்கியம் பாதிப்பு இருந்தாலும் ஒரு இந்திய எழுத்து பற்றிய வரை இவ்வளவையும் தாண்டி தன் மரபு, தன் ஐதீகங்கள், சாச்சைகள், தத்துவங்கள் (தன் இந்திய அடிப்படையில்) என்ற எதாஸ்தானத்துக்குத் திரும்புவது தான். நம்மில் பலருக்கு இந்த மரபு விஷயம் இயற்கையாகவே ஒரு அழுத்தலான சாயலாக அமைந்து விடுகிறது; வேறு சிலருக்கு அதன் அடித்தளம் இருந்தாலும் அது என்ன என்ற உருத் தெரியாத அளவுக்கு உருவமாக அல்லது அருவமாக அமைந்து விடுகிறது. எனவே க. நா. சு. வை பற்றிய வரை அவர் எழுத்துக் கூட ஒரு சர்ச்சைக்கு உரிய விஷயமாகி விடுகிறது! அதிக தூரம் போக வேண்டிய அவசியமில்லை! எனது உருவம் எனக்கு உருத் தெரியாத ஒரு கால கட்டத்தில் தான் நான் க. நா. சு. வைப் படிக்க ஆரம்பித்தது என்று நினைக்கி

றேன். அப்பொழுதெல்லாம் ஒரு உணர்வு இவர் நாவல்கள் நன்றாக இருக்கின்றன. ஆனால் இவை நன்றாக ஏன் இருக்கின்றன, நன்றாக இல்லாமல் அல்லவா இருக்க வேண்டும் என்று ஒரு கேள்வி! தற்கால இலக்கியத்தின் பாதிப்பு என்று சொல்லவோ, அல்லது சுயமாக அமைந்த ஒரு உள் வளைவு என்று சொல்லவோ, எது என்று தெரியவில்லை— நான் ஒரு மாதிரி என் இலக்கிய அனுபவத்தை வகைப்படுத்தி வைத்துக் கொண்டிருந்தேன்—முதலாவதாக அனுபவத்தின் அறைகூவலுக்குச் சிந்தனை கூட ஈடு கொடுக்க முடியாது என்பது ஒன்று: இரண்டு, இராவணன் இல்லா விட்டால் இராமன் இல்லை என்பது மாத்திரமன்று. இலக்கிய பூர்வமாக இராமனை விட இராவணன் தான் முக்கியமென்ற ஒரு பாவனை! (இது மேல் நாட்டு இலக்கியத்துடன் ஒரு மேலோட்டமான பரிச்சியத்தினால் ஏற்படும் ஒரு விளைவு என்று தான் எனக்குத் தோன்றுகிறது) இரண்டுமே சரியான அடிப்படைகள் தானா என்று நான் என்னையே இன்று கேட்டுக் கொள்கிறேன். க. நா. சு. உலகில் தீயவர்கள்—தீமை எல்லாம் சித்தரிக்கப்படுகின்றன. நல்லவர்களும்—நன்மையும் சித்தரிக்கப்படுகின்றன. ஆனால் இந்த இரு அடிப்படையான பிரிவுகளும் அடிப்படையானப் பிரிவுகளே இல்லை என்று நாம் அவர் நாவல்களிலிருந்து உணருகிறோம். எலியட் டாண்டேயின் உலகம் ஒரு அடிப்படைத் தத்துவத்தை உள்ளடக்கிக் கொண்டிருக்கிறது என்கிறான்; ஆனால் ஷேக்ஸ்பியரின் பிரபஞ்சம் நமக்கு ஒரு சிறந்த எழுத்தாளனும் பெயர் தெரியாததற்குப் பெயர் சொல்வதற்கு ஒரு முயற்சி செய்கிறான் என்பது தானே? முன்னது தத்துவம் என்றால், பின்னதும் தத்துவம் தானே? மேலும் ஷேக்ஸ்பியரின் ஹாம்லெட் டெம்பெஸ்ட் என்பவற்றிற்கும் ஒதெல்லோ, மாக்பெத், லியர் என்பவற்றிறகும் உள்ள வேறுபாடு இங்கு சர்ச்சை செய்யப்படும் விஷயத்தில் வைத்துப் பார்க்கையில் என்ன? இதைப் போலவே அனுபவம்—சிந்தனை என்ற இரண்டும் ஒரு உயர்தர இலக்கியப் படைப்பில் உருத் தெரியாமல் கலந்திருப்பதுதானே? (நடுவில் ஒரு கேள்வி; மௌனியின் கதையில் நன்மை—தீமை, அனுபவம், சிந்தனை எப்படிக் காட்சி அளிக்கின்றன?) இப்பொழுது உணர்கிறேன். —"பொய்த்தேவி"ல் சாம்பமூர்த்தி ராயர் சாவைக் கேட்டதும் சோமுமுதலியார் அந்தக் கணமே உட்கார்ந்து விடுவது ஒரு மகத்தான கட்டம் என்பதை (இன்று இதைப் படிக்கும், அவர் படிப்பாரென்றால், க. நா. சு. முன் போலவே "நீ இப்பொழுது அப்படி நினைக்கிறாய் இல்லையா?" என்று சொல்லிவிட்டு நகர்ந்து விடுவார்!) வைத்தீஸ்வரன் தான் என்று நினைக்கிறேன் ஒரு கவிதையில் (கதவு?) கேட்கிறார்:

"அரை வட்ட வாழ்வுக்கு
ஆசாரம் வேறா?
விடு என்னை! விழுகிறேன்"
என்றது.

ஆம், வேறு ஒரு நண்பர் குறிப்பிட்டபடி நான் புஸ்தகத்தைப் படிக்கிறேன். என்பதில்லை. புஸ்தகமும் என்னைப் படிக்கிறது. இதனால்தான் பல வாசகர்களுக்குக் க. நா. சு. வின் நாவல்கள் எரிச்சலை மூட்டுகின்றன. அவருடைய பாத்திரங்களை முழு வாழ்வு வாழ்கிறவர்கள்—அரை வாழ்வில் அவஸ்தைப் படுகிறவர்கள் என்று நிர்ணயப் படுத்தலாம் என்று நினைக்கிறேன். அவர் நாவல்களை ஒரு பக்குவம் அடைந்த நிலையில் படிப்பவர்களுக்கு அவர் நமது வாழ்வை—குடும்பம்! பொருளாதாரம், சமூகம், தத்துவம்—என்ற அடிப்படைகளை வைத்துக் கொண்டு எவ்வளவு ஆழமாகவும் நுண்மையாகவும் ஊடுருவப் பார்த்திருக்கிறார் என்பது தெரியும். ஃப்ராய்டு, யூங் இவர்களைப் பின்பற்றி அவர் தன் பாத்திரங்கள் உள் உலகை அலசமறுக்கிறார். (இது சரியா, ஏன் கூடாது என்பது வேறு கேள்விகள்) பாத்திரப் படைப்பிலும் சரி, அடிப்படைத் தத்துவத்திலும் சரி அவர் பரிபூர்ணத்துவத்தை ஆராதிக்கிறார். அப்பன் மகன் உறவு, குடும்பம், சமூகம், தத்துவம், ஏன் கடவுள் என்ற தத்துவம் என்பவை எல்லாம் ஒரு பூர்ணதத்துவத்துடன் நோக்கப்படுகின்றன. (இலக்கியத்தில்தான் இந்தப் பூரணம் சாத்தியப்படும் என்றார் ஒரு நண்பர்; இதையும் க. நா. சு. அறியாதவரில்லை) அவர் நாவல்களில் கவிதை செயல்படுகிறது; "பொய்த்தேவில்" காவேரி வர்ணனை, இடைவேளை, "வாழ்ந்தவர் கெட்டால்" என்பதில் ஒரு பகுதியில் — இரும்புக் கண், காயாத கானகம், திகிரிபோன் கதை, கடைசி யாத்திரை, அப்பிரதக்ஷணம் — இவையெல்லாம் எனக்குப் பிரெஞ்சுக் கவிஞர்களின் ஸிம்பாலிஸ மயமான படிம உலகை நினைவுறுத்துகின்றன. "ஆட்கொல்லி" யில் சில பகுதிகளில் படிமங்களைப் பவுண்டுபோல கிளிப்பதமாகவும் அழுத்தமாகவும் பயன்படுத்துகிறார். ஒரு இடத்தில் அவர் நாவலின் நடையின் கதியைப் பற்றிக் குறிப்பிடுகிறார். "ஆட்கொல்லியில்" ஆற்றொழுக்காக செல்லும் நடையில் உள்முகமாக எவ்வளவு காரமான கிண்டல் செயல்படுகிறது என்பதைத் தெரிந்து கொள்வது ஒரு தனி அனுபவம். நான் அதிகமாக எழுத விரும்பவில்லை. அவர் நாவல்கள் நமக்கு அனுபவிப்பதற்தும் சிந்திப்பதற்கும் நிறைய இடம் கொடுக்கின்றன.

அவர் சிறுகதையில் நாம் சம்பிரதாயமாக வகுத்துக் கொண்டிருக்கும் உருவத்தைக் காணமுடியுமா என்பது வேறு கேள்வி. ஆனால் தமிழில் எந்தச் சிறந்த சிறுகதைத் தொகுதியிலும் அவருடைய "சாவித்திரி" "அசடு", "பல்லாங்குழி", "மகாத்தியாகம்"

போன்ற கதைகள் ஒதுக்க முடியாது. "கண்ணன் என் தோழன்" என்ற கதையில் உள்ளடக்கம் உருவத்தைச் சிதைக்கிறது. இந்த கட்டுரையின் வரையறையின் நிர்பந்தத்தால் சிறுகதையைப் பற்றி இதற்கு மேல் எழுத முடியவில்லை. அவர் கவிதைகளில் "தரிசனம்" அவர் அர்த்தத்தின்படி மரபு வழி வந்த ஒரு உத்தம கற்பனை. மற்ற கவிதைகளில் அவரது கிண்டலும் பவுண்டின் கவிதையில் போல படிமமும் வெற்றிகரமாக இயங்குவதைப் பார்க்கலாம். விரிவஞ்சி இந்தப் பகுதியை நாடகங்களை ரஸித்துப் படித்தேன் என்ற நினைவுடன் முடித்துக் கொள்கிறேன்.

விமர்சகன் என்ற அளவில் க. நா. சு. கனமான விஷயங்களை மிகவும் அனாயசமாகத் தெளிவாகவும் சுருக்கமாகவும் கூறுகிறார். இதனாலேயே சிலர் அவர் மேலோட்டமாகப் போகிறார் என்று நினைக்கிறார்கள்! கண்ணோட்டம், ரஸனை, பூர்ணத்வம், தனித்வம், என்பவை படிமம், குறியீடு என்பவை போல முக்கியமான வார்த்தைகள் தான்! இவர் திரும்பத் திரும்ப ரஸனை அடிப்படையில் சிறந்த (உலக) இலக்கியங்களைப் படிப்பது தான் இலக்கிய விமர்சனத்தின் அடிப்படை என்கிறார். இது எல்லோரும் கூறுவது தானே என்று ஒதுக்கி விடுவதற்கில்லை—இது நமது வாசகர்களுக்குத் தெரியவில்லை என்பதால் என்றாவது தெரியுமா என்று கேட்பது வேறு விஷயம். இப்படி கேட்பது நம்மை நாமே புறக்கணித்துக் கொள்வது தான். க. நா. சு. எலியட்டின் மேற்கோள் காட்டி உருவத்தை விட விஷய கனம் தான் பிரதானம் என்று பேசுகிறார். ஆனால் எலியட் எந்த இலக்கிய படைப்பும் எவ்வளவு விஷய கனம் இருந்தாலும் உருவச் சிறப்பு இலலாவிட்டால் இலக்கியமே ஆகாது என்கிறான் என்பதும் நினைவிற்கு வருகிறது. பி. ஆர். ராஜமையரின் "கமலாம்பாள் சரித்திரம்" என்னைப் பற்றிய வரை உருவச் சிறப்பு இல்லாததால் முழு வெற்றி இல்லை என்றே கருதுகிறேன். போரும் சமாதானத்தில் இருக்கிறதா, அதில இருக்கிறதா, இதில் இருக்கிறதா என்று கேட்பதெல்லாம வேறு; இலக்கியம் வேதாந்தமாகலாம்; ஆனால் வேதாந்தம் இலக்கியமாகாது. இலக்கியத்தில் மனிதனை வைத்துத் தான் கடவுளையும் அளக்க வேண்டும்! இதைப் போலவே நாவல்களின் கடைசியில் ஒரு பிரிவு செய்கிறார்—விஷயத்தை வைத்துக் கொண்டு—இது எனக்குச் சரியாக தோன்றவில்லை. இதைப் போலவே சில இடங்களில் "சிறந்த" ஒரு ஐந்து அல்லது ஆறு ஆசிரியர்கள் பெயர்களைச் சொல்லிவிட்டு அதில் ஒரு இருவரைக் காலதேவன் காலை வாரிவிடலாம் என்கிறார்! ஆனால் இதை நான் வரவேற்கிறேன்! அந்தஸ்தினாலும், பொருளாதார வசதியாலும், பகட்டுப் படாடோப வெறியாலும் சிலர் நன்றாக எழுத ஆரம்பித்ததும் க. நா. சு. இவர்கள் நன்றாக எழுதுகிறார்கள் என்றதனாலேயே எழுதாமலே இவர்களில் சிலர் இருப்பதும், சிலர் மோசமாக எழுதி அதையே சிறப்பாக எண்ணி மகிழ்வதும் க. நா. சு. வின் திருவிளையாடலினால் (ஆம், திருவிளையாடலினால்!) ஏற்பட்ட பல அற்புதங்களில் ஏற்பட்ட ஒரு அற்புதம்! ஆனால் இதை நான் வரவேற்கிறேன்! அலசல் விமர்சனம் என்பதும் ஒரு கட்டத்தில் இலக்கியப் படைப்பின தரத்தைக் காப்பாற்ற வந்ததுதான். இது க. நா. சு. வுக்கும் தெரியும். அவரே கு. ப. ரா. சிதம்பர சுப்ரமணியன் (சிறுகதை) புதுமைப் பித்தன் இவர்களைப் பற்றி நன்றாக எழுதியிருக்கிறார். அலசல் பூர்வமாக! ஆனால் சி. சு. செல்லப்பாவின் அலசல் விமர்சனம் வ. வெ. சு. ஐயர், மௌனி (ஓரளவு) லா. ச. ரா. இவர்களைப் பற்றி வெற்றிகரமாக இயங்குகையில் ஏன் பி. எஸ். ராமையா விஷயத்தில் மாத்திரம் தோல்வி அடைகிறது? க. நா. சு. புதுக்கவிதை, புதுக்கதை மொழிபெயர்ப்பு இவைகளின் அடிப்படைகளை மிகவும் ஆற்றலுடன் தொட்டுக் காட்டியிருக்கிறார். அவருடைய "இலக்கிய விசாரம்", "விமர்சனக் கலை" "இலக்கிய வட்டத்" தொகுதியில் அவர் இலக்கியத்தை பற்றி எழுதியிருப்பவை இன்று தமிழில் எழுத ஆரம்பிக்கும் எந்த எழுத்தாளனுக்கும் இலக்கியத்தின் அடிப்படைகளை அறிந்து கொள்வதற்கு மிகவும் பயன்படும். அவர் "படித்திருக்கிறீர்களா?" என்ற தொகுதிகளில் இன்னொரு திருவிளையாடல் செய்திருக்கிறார்! முதல் தரமான விமர்சனக் கட்டுரைகள் முதல் தரமான ஆசிரியர்களைப் பற்றி எழுதியிருப்பவர் எந்த அடிப்படையிலும் இலக்கியம் என்று கருதப்படாத தர சூன்யமான படைப்புக்களை பற்றியும், ஆங்கிலத்தில் சொல்வது போல், "வாயில் நாக்கைத் துழாவிக் கொண்டே" எழுதியிருக்கிறார்!

அவருடன் பேசுவதும் பழகுவதுமே ஒரு இலக்கிய அனுபவம். அவர் நவீன தமிழ் இலக்கிய வளர்ச்சிக்குச் செய்த பங்கு ஒரு கணிசமான பங்கு. க. நா. சு. ஒரு தவிர்க்க முடியாத கிரியா சக்தி; ஒரு ஸ்தாபனம்; ஒரு தத்துவம்.

அவரைப் பற்றி இவர் பேசவில்லை, அவர் பேசவில்லை, இந்தப் பரிசு அவருக்குக் கிடைக்கவில்லை, அந்தப் பரிசு கிடைக்கவில்லை, என்பதெல்லாம அர்த்தமற்ற பேச்சுக்கள். வள்ளுவன் பாஷையில் சொல்வதென்றால், சாகப் பிறந்தவர் அவர்! அதற்கு மேல் ஒரு படி சென்று எமிலி டிக்கின்ஸன் கூறிய மாதிரி அவரைப் பற்றியும் இவ்வாறு கூறலாம் என்று நினைக்கிறேன் "என் எழுத்தின் தரத்தின் முன் புகழ் எம்மாத்திரம்?" ●

# கா. நா. சு.வும் தமிழ் இலக்கியப் பிரக்ஞையும்

ந. முத்துசாமி

குதிரை சக்தி தான் விரைவின் எல்லையாக இருந்த நாளிலும் சம்ஸ்கிருதம் தமிழைப் பாதித்திருக்கிறது. தமிழ் இலக்கணமும் இதை உணர்ந்து ஏற்றுக் கொண்டிருக்கிறது. உலகத் தொடர்பு செயற்கைக் கோள்களின் மூலம் பெருகிய இந் நாளில் தமிழ் இலக்கியம் அதன் பழைய மரபுகளுக்குள் இருந்து கொண்டிருக்கும் என்று எதிர்பார்ப்பதற்கில்லை. பாதிப்பு நேரும் சாத்யம் சதா இருந்து கொண்டிருக்கிறது. இதைப் பலர் உணர்வதில்லை. ஒலி சமிக்ஞைகள் மொழியாக மாற ஆரம்பித்த நாளிலிருந்து அருகிலிருந்து வளர்த்து வந்தவர்கள் போல பாத்யதை கொண்டாடுகிறார்கள். இவர்கள் எப்போதும் அன்னிய அபாயத்திலிருந்து காத்துக்கொள்ளும் இயல்புடன் இருக்கும் ஆதிவாசிகளை ஒத்தவர்கள். பச்சை மாமிசம் உண்டு வில் அம்புடன் பாதுகாப்பென்று காலத்தை ஒட்டிய இலக்கிய வளர்ச்சிக்குத் தடையாக நின்று கொண்டிருக்கிறார்கள். இவர்களையும் இவர்கள் தமிழையும் வெளி உலக வெளிச்சம்பட காண்பித்துக் கொடுத்து நாகரிகப் படுத்த வேண்டியிருக்கிறது.

பாதிப்பு பரஸ்பரமாக இருக்க முடியும். ஆனால், விண்வெளியில் அஸ்ட்ராய்ட் பெல்ட்டைத் தாண்டிப் போகத் தெரிந்தவனை இங்கு காட்டு எல்லையைத் தாண்டத் தெரியாதவன் எவ்விதம் பாதிப்பது? இவனே பாதிக்கப்பட இணக்கமில்லாதிருப்பவன்.

ஆரம்பத்திலிருந்து இது வேறு எவரையும் விட மிக வலுவாக உணர்ந்திருப்பவர் க நா.சு. தமிழில் புதிய இலக்கிய பிப்ரக்ஞையை உண்டாக்குவதில் தொடர்ந்து பிரக்ஞையுடன் இருந்து கொண்டிருப்பவர். அதனால், தன் தாக்குதலின் ஒரு பகுதியை பண்டிதர்கள் மேல் நடத்திக் கொண்டு வந்திருக்கிறார்.

பொதுமக்களும் படைப்பாளியும் உயிருள்ள மொழியுடன் தொடர்பு கொண்டிருப்பவர்கள். மொழியுடன் பொதுமக்களின் தொடர்பு பிரக்ஞையில்லாதது. சிப்பியைப் போல உறுத்தலில் மொழியை உண்டாக்கிக் கொண்டிருப்பவர்கள். படைப்பாளிக்கு மொழியுடன் தொடர்பு பிரக்ஞையுடனானது. சிப்பியிலிருந்து முத்தை எடுத்துக் கொள்கிறவன் இவன்.

செத்ததை வைத்து ஏங்கிக் கொண்டிருப்பவன் பண்டிதன். இவன் எதையும் உண்டாக்குவதில்லை. முடிந்த போதெல்லாம் உயிர் வளர்ச்சிக்குத் தடையாகவே இருந்து கொண்டிருப்பான்.

இலக்கண ஆசிரியனோடு பண்டிதனைக் குழப்பிக் கொள்ளாமல் இருந்தால் பண்டிதனுக்குச் சரியான அர்த்தத்தைத் தெரிந்து கொள்ளலாம். இலக்கண ஆசிரியன் மொழி அமைப்பு வரலாற்றைச் சொல்பவன். புதிதாக வருபவற்றையும் வரலாற்றில் சேர்த்துக் கொள்பவன். வரலாறு என்பது ஒவ்வொரு நிமிஷமும் நடந்து கொண்டிருப்பது. பாதிப்பு தெரிய நாளானாலும் ஒவ்வொரு நிமிஷமும் நடந்து கொண்டிருப்பது அது.

பண்டிதன் இறந்த கால இலக்கியத்தையும் நிகழ்கால இலக்கியத்தையும் போட்டுக் குழப்பிக் கொள்கிறவன். நிகழ்காலத்தில் இருந்து கொண்டு இறந்த காலத்தில் வசிப்பவன். இறந்த கால இலக்கிய மரபுகளே நிகழ் கால இலக்கியத்தின் இலக்கணமாக இருக்க வேண்டுமென்ற பிடிவாதக்காரன். பண்டிதனுக்கு மிகச் சுலபமான இலக்கணமும் உண்டு. என்மனார் அறியப்பலது என்று உபயோகிப்பவர்கள் பண்டிதர்கள் என்று சுலபமாகச் சொல்லி விடலாம். முறையாகத் தமிழ் படித்தவன் பண்டிதன் என்பதில்லை. மேற்படி இலக்கணத்திற்கு உட்பட்டால் அவன் பண்டிதன். முறையாகப் படிக்காமல் கிளியாக அவனிடம் கற்றுச்சொல்பவன் பண்டித மனப்பான்மைக்காரன்.

புதிதாகத் தோன்றும் எதையும் இவர்கள் எதிர்த்துக் கொண்டிருப்பார்கள். நேற்று முளைத்த பண்டிதனும் எதிர்ப்பான். நாளைக்கு முளைப்பவனும் எதிர்ப்பான். பாரம்பரியமாக இவர்கள் பல்கலைக் கழகங்களில் தயாராகி வந்து விடுகிறார்கள்.

இந்தக் குறை பல்கலைக் கழகங்களில் இருக்கின்றதென்பதையும் க. நா. சு. சொல்லி வந்திருக்கிறார்.

க. நா. சு. வுக்கு எதுவும் தற்செயல் விளைவாக இருப்பதில்லை. அவர் பிரக்ஞை நிலையில்

இயங்குகிறவர். தன் காரியங்களுக்கு நோக்கமும், அது சென்று சேரும் இடமும் தெரிந்தவர். நிதானமாக உணர்ச்சி வசப்படாமல் எல்லாவற்றையும் செய்கிறவர். அதனுல் அவர் எழுத்தில் கோபம் காணப்படுகிறதில்லை. ஆனுல், அவை கோபத்தை ஏற்படுத்துபவையாய் இருக்கின்றன. படிப்பவனுக்கு அதிர்ச்சி கொடுக்கும் சக்தி உள்ளவை அவை. அதிர்ச்சிகளைத் தொடர்ந்து தேவையான நேரங்களிலெல்லாம் கொடுத்துக் கொண்டு வருகிறவர். விழித்துக் கொண்டவனை தூங்குவதற்கு விடாமல் அதிர்ச்சி கொடுப்பவர். விழிப்பு நிலையில் அவனை வைத்திருக்க தான் அயரக் கூடாது என்பதை நன்கு உணர்ந்தவராக அவர் இருக்கிருர்.

அவர் எழுத்தில் காணப்படுகிற சூத்திர வாக்கியங்கள் சிலவற்றை அனுபவ பூர்வமாக அறிந்து கொள்வதல்லாது வேறு எவ்விதமும் தெரிந்து கொள்ள முடியாது. அனுபவமில்லாதவனின் கவனத்தைக் கவராமல் போகிற எளிமையுடன் மற்ற வாக்கியங்களிலிருந்து வேறுபடும் கவர்ச்சியுமில்லாது நிதானத்தில் மட்டும் தோன்றும் அர்த்தமுள்ள வாக்கியங்களாக உணர்த்த லுள்ளவையாக அவை இருந்து கொண்டிருக்கின்றன! படித்துப் படித்துப் பெறுகின்ற அனுபவம் தான் இவற்றை அறியும் பிரக்ஞையுள்ளவனாக எவனையும் ஆக்குகிறது. அனுபவத்தில் தான் பிரக்ஞையின் பல நிலைகளைக் காண இயலும். அப்போது தான் எப்பிரக்ஞை நிலையில் ஒரு இலக்கியம் உருவாகியிருக்கிறதோ அதன் ஜீவனை அறிய இயலும். அதனுல்தான் போலும் ஒன்றை அலசிக் காண்பிப்பதை விட சுட்டிக் காண்பிபபதில் நம்பிக்கை உள்ளவராக இருக்கிருர் க. நா. சு.

அலசல் முறையும் பயனற்றது என்பதில்லை. இலக்கியத்தைக் கற்கும் ஆரம்ப மாணவனுக்கு இது மிக உதவியாக இருக்கலாம். இலக்கிய அனுபவம் நிரம்பியவனுக்கு இது சற்று ரசனைக் குறைவாகத் தோன்றுவதற்கு சாத்யமிருக்கிறது. மூலத்தின் சுவையை ஒருவன் சுய அனுபவமாக அடைய அலசல் முறை தடையாகவே இருக்கிறது. இவனுக்கு சூட்சுமங்களைச் சுட்டிக் கொணடு போவதின் மூலம் தான் அதன் விஸ்தாரத்தை உணர்த்த வேண்டும். இப்போது விமர்சனமும் ஒரு படைப்புக் கலையாக மாறுகிறது. அலசல் விமர்சனக்காரன் உரையாசிரியரைப் போலத் தோன்றுகிருன்.

தனக்கு விமர்சனத்தில் நம்பிக்கையில்லை என்றும் சொல்கிறவர் க நா. சு. முரணபாடுகள் உள்ள மனிதராக 'விஸ்வருபம் காட்டும் க. நா. சு. வின் சொல்லுக்கும செயலுக்கும் முரணுக இது தோன்றலாம். ஒரு தேவையினுல் அவர் விமர்சனத்தை மேற்கொண்டதாக இதை அர்த்தப்படுத்திக் கொள்ளலாம். தன்னுடைய நம்பிக்கை படைப்பு இலக்கியத்தில்தான் என்ற அர்த்தத்தில் இதைச் சொல்லியிருக்கலாம். விமர்சனத்தின் மூலம் இலக்கியத்தின் முழு உண்மையையும் கண்டு விட முடியாது எனபதாக இருக்கலாம். விமர்சனத்திற்கும் மிஞ்சி நிற்பது நல்ல இலக்கியம். சுயபிரக்ஞனுக்கு விமர்சனம் பயனற்றது என்றும் இருக்கலாம். இவன் பிறன் செய்யும் விமர்சனங்களை முந்தி தானே செய்துகொண்டு விடுகிறன். விமர்சனமின்றி பிரக்ஞையில்லை. விமர்சனம் கவனம். கவனம் பிரக்ஞை.

இதனுல் விமர்சனம் தேவையில்லையென்று அவர் சொன்னதாகக் கொள்வதற்கில்லை. தமிழில் விமர்சனம் வளரவில்லை என்று சொல்லிக் கொண்டு வந்திருப்பவர் அவர். தமிழில விமர்சனம் வரக் காரணகர்த்தர்களில் அவர் ஒருவர். முதன்மையானவர். இன்னமும சொல்லி கொண்டிருக்கிருர். தன் கருத்திற்கு மாறுபட்டதைச் சொல்கிற விமர்சனங்கள் வர வேண்டும் என்று தனி உரையாடல்களில் அவர் சொல்வதை அவருடன் பழக்கமுள்ளவர்கள் கேட்டிருப்பார்கள். தன்னைச் சார்ந்து ஒரு குழுவை வைத்துக் கொண்டிருப்பதை விரும்புகிறவரில்லை அவர் என்பதை இது காட்டுவதாகக் கொள்ளலாம். அடி மனம் பல முகமூடிகளுடன் ஏமாற்றுவதற்கு முயல்வது என்பது தெரிந்தே இவ்விதம் சொல்லத் தோன்றும்படி இருக்கிருர். அவர் விழிப்பு நிலையில் ஒருவனை வைப்பதற்கு விமர்சனம் அத்யாவசியமானது என்பதைக் கண்டவர் அவர்.

தன் விமர்சனத்தில் ஆனந்த விகடன், கல்கி, குமுதம், கலைமகள், தினமணிக்கதிர் முதலிய ஜனரஞ்சகப் பத்திரிகைளில் எழுதப்படுபவைகளை பத்திரிகைக் கதைகள் எனப் பிரித்து படைப்பாளியின் பிரக்ஞையில் இருத்தியவர். இப்படி ஒரு பிரிவு தமிழில் என்றில்லை பிற மொழிகளிலும் இருந்து கொண்டு வருகிறது. இவைஇலககியப் பிரக்ஞையில்லாதவை. சந்தையில் விலை போகும் சரக்குகளை வாங்கி விற்கும் வியாபார நோக்கமே இவற்றுக்கு. இந்தச் சரக்கை உற்பத்தி செய்வதற்கென்று பட்டரை எழுத்தாளர் இனமொன்றும் இருந்து கொண்டு வருகிறது. இது தவிர்க்க இயலாதது. எந்தச் சாதனையும் இவர்களால் சாத்யமில்லை. எந்தச் சாதனையும் இவற்றின் மூலம் சாத்யமில்லை. தங்கள் படைப்புகளை ஏற்கும் சாதனமாக இவற்றை நம்புவது அர்த்தமற்றதென்பதையும, தங்களுக்கென வெளியீட்டுச் சாதனம் தனியாக வேண்டுமென்பதையும் ஒரு சிறுபான்மையினரை உணர வைத்தார் க. நா. சு. இதுவரை, என்றேனும் ஒரு நாள் இவற்றில இடம்பெறுவதை நோக்கமாகக் கொண்டு எழுதி வந்த சிலர் இச்சிறுபான்மையினருடன் ஒண்ட முடியாமல்

போயிற்று. பெரிய பத்திரிகை வாசலில் ஏற சிற்றேடு ஒரு படி இவர்களுக்கு என்பதை சிறுபான்மையினர் உணரும் எச்சரிக்கையும் க. நா. சு. விடமிருந்து வந்ததுதான். ஒரே நோக்கத்துடன் அர்ப்பணித்துக் கொள்ளும் சிற்றேடுகள் தோன்றுவதற்கும் சாத்யமேற்பட்டது.

இந்தச் சிறுபான்மையினர் தான் ஒரு கத்தைச் சமூகத்தைப் பாதிக்கிறவர்கள். பிரக்ஞையினால் விஷயப் பரிமாணத்தை உணர்ந்தவர்கள் இவர்கள். தான் பாதித்துத் தமிழில் இவர்களை உண்டாக்கினார் க. நா. சு.

இலக்கியப் பிரக்ஞையுள்ளவன் உலகத்தில் நடப்பவற்றையெல்லாம் கண் அயராமல் கவனித்துக் கொண்டிருப்பவனாக இருக்க வேண்டியிருக்கிறது. தன் அருகில் நடப்பவற்றின் முக்யத்துவம் அவனுக்குத் தெரிந்திருக்க வேண்டும். ஒரு புதிய படைப்பையும் படைப்பாளியையும் கண்டு கொள்ளும் சூட்டிகை வேண்டும் அவனுக்கு. இப்படிக் கண்டுகொள்வதில் முதல் நபராக இருந்து சிறுபான்மை நிலை கொள்ள உதவினார் க. நா. சு. பிறர் சொல்லத் தயங்கிய போதெல்லாம் தயக்கமில்லாத நிச்சயமும் தெளிவும் அவரிடம் இருந்திருக்கின்றன. இந்நேரங்களில் சக்தியிருந்தும் கண்டு சொல்லும் நம்பிக்கையில்லாதவர்களாக மற்றவர்கள் இருந்து வந்திருக்கிறார்கள்.

இந்தச் சந்தர்ப்பங்களில் பட்டியல் சொல்கிறவர் என்று க. நா. சு. வை குற்றம் சாட்டிக் கொண்டு வந்திருக்கிறார்கள். பெயர்ப் பட்டியல் சொல்வது தவிர்க்க முடியாதது. ஒருவன் ஊக்கமுற்றுக் காரியமாற்ற வேண்டியிருக்கிறது. அவன் திறமை அங்கீகரிக்கப்பட வேண்டியிருக்கிறது. தானே விளைவாகச் செய்யும் போக்கு மிகவும் குறைவு. இதற்கு ராக்ஷச சக்தி வேண்டும். எதிர்வினையாக எல்லாம் நடைபெற வேண்டியிருக்கிறது. ஊக்கமுற்றோ கோபப்பட்டோ காரியமாக வேண்டியிருக்கிறது. சவால் தேவைப்படுகிறது இந்தச் சவாலைக் கொடுத்துக் கொண்டிருப்பவர் அவர்.

அவர் பட்டியல்களில் சில பெயர்கள் விடுபட்டுப் போகிறதைப் பற்றியும் குற்றச்சாட்டு இருக்கிறது. திறமையைக் கண்டு சொல்வது முதல் காரியம். ஒரு பார்வையில் சில பெயர்களை சேர்த்துக் கொண்டும் இன்னொரு பார்வையில் சிலவற்றை விட்டும் சொல்வது தான் பார்வையைக் காட்டுவது. விமர்சனம் வாக்காளர் பட்டியலில்லை. ஆரம்பத் திறமை பின்னால் மங்கிப் போகலாம். தன்னுடையப் போக்கிலேயே முன்னேற்றமில்லாத நிலைமை வரலாம். அடிப்படையில் பிரக்ஞை

## Statement about Ownership & Other Particulars about Newspaper 'Ka Cha Ta Tha Pa Ra'

### FORM IV (SEE RULE—8)

| | | |
|---|---|---|
| 1. | Place of Publication | — No. 1, Devadi Street Mylapore, Madras-4. |
| 2. | Periodicity of its Publication | — Monthly |
| 3. | Printer's Name | — M. K. Swamy |
| | Nationality | — Indian |
| | Address | — No. 8, Mundakanni Amman Koil Street, Madras-4. |
| 4. | Publisher's Name | — N. Mahaganapathy |
| | Nationality | — Indian |
| | Address | — No 47, Nallathambi Mudali Street, Madras-5 |
| 5. | Editor's Name | — N. Krishnamurthy |
| | Nationality | — Indian |
| | Address | — No. 1, Devadi Street, Mylapore, Madras-4. |
| 6. | Names and Addresses of Individuals who own the Newspaper and Partners or Shareholders holding more than one percent of the total capital | — N. Mahaganapathy, No. 47, Nallathambi Mudali Street, Madras-5. |

I, N. Mahaganapathy, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

Date 1—3--72 } (Sd) N. Mahaganapathy
*Signature of Publisher*

யற்றுப் போவது இதெல்லாம். படைப்புகளை இயக்கத்தில் நேரக்கூடிய பாதிப்புகளுக்கு ஏற்கவே பட்டியல்கள் அமைய வேண்டுவதாகிறது. க. நா. சு. வின் பட்டியல் நுணுக்கமான வித்யாசங்களால் அமைந்திருப்பதை வாசக அனுபவத்தில் கண்டு கொள்ள வேண்டும். இப்பட்டியல்களைப் பற்றிய பிரச்னையைக் கிளப்புவதானால் இந்த நுணுக்கவித்யாசங்களில் அபிப்பிராய பேதம் காட்டுவதில் அமைய வேண்டுவதாக அவை இருக்க வேண்டும். எதிர்ப்பாளிகள் வேறு பட்டியல் தருவதில் தைத்துச் சுருண்டு விழுகின்றனர்.

க. நா. சு. வின் பட்டியல்களில் தான் மௌனியும் புதுமைப் பித்தனும் நிரந்தரமாக இருந்து கொண்டிருக்கிறார்கள். மற்ற பெயர்கள் இடம்மாறியும், விடுபட்டும், நேரத்திற்குத் தகுந்தது போலவும் இடம் பெற்றுக் கொண்டிருப்பதையும் கவனத்தில் கொள்ள வேண்டியிருக்கிறது. நினைவிலிருந்து இடம் பெறுகிற ஞாபக மறதியைக் கொண்ட பட்டியல்கள் என ஒதுக்குவதற்கில்லை. விமர்சகனின் மறதிக்கு மன்னிப்புக் கிடையாது. நோக்கத்துடன் எனக் கொள்ள வேண்டுவதாகிறது. இடமாற்றம் முக்கியத்துவமில்லாததாகவும் முத்யத்து முள்ளதென்றும் கொள்ள இருக்கிறது. நிலையில்லாத காலத்தில் உதிர்ந்து இடம் மாறிப் போகிற பெயர்களாக இவைகளைக் கொள்ளவும் இடமிருக்கிறது. மௌனியையும் புதுமைப்பித்தனையும் நிரந்தரமாகச் சொல்வதில் மேலே சொன்னது உறுதிப்பட வேண்டியதாகிறது.

மணிக் கொடிக் காலத்தைப் பற்றியக் கட்டுரையில் இடம் பெற்ற ஒரு பெயரை தமிழில புதுச் சிறுகதைகள் என்ற கட்டுரையிலும் தேடி ஏமாற்றமும் கோபமும் கொள்கிறார்கள். அதே கட்டுரையில் மௌனியின் பெயர் இடம பெறுகிறதென்று வைத்துக் கொண்டால் முரண்பாட்டைக் காண்பதாக ஆத்திரப்படுவார்கள் இதில் ஆத்திரப்படுவதற்கு ஒன்றுமில்லாத உண்மையைக் காணபதற்குத் தெரியாதவர்களாகிறார்கள் இவர்கள் மௌனியின் கதைகள் என்றும் புதிதாகத் தோன்றும் கூறுகளைக் கொண்டு அமைந்திருக்கின்றன. ஒரு நூற்றாண்டிற்குப் பின் சூழ்நிலை மாறினாலும மாறாத அடிபபடை உணர்வுகளின் பரிபூரண நிலையைக் காட்டும் தூய வடிவில் அவை உருப் பெற்றிருக்கின்றன. இரண்டாயிரம் வருஷத்து சங்கக் கவிதையை புதுக் கவிதைக்காரர்கள் தங்கள் நேற்றைய மரபு என்பதின் ரகசியமும் தவறான காரணங்களுக்கென்று தெரியாது சொல்லும அனுபவமற்றவர்களுக்கு பாடம் சொல்லித் தர வேண்டிய சிரமம் தமிழில இருக்கிறது. மௌனியைச் சொல்லும் போதும் குழு மனப்பான்மையென்று புரிந்து கொள்ளலில்லாது ஒதுக்கிட ஏது இருக்கிறது. ஒத்த இவ்வரிச் சூழ்நிலையில் புதுமைப்பித்தன் மௌனியை சிறுகதைத் திருமூலர் எனச் சொன்னதற்குப் பிறகு மௌனி தொகுப்பாக கிடைக்கும் வரை மௌனியைத் திரும்பத் திரும்பச் சொல்லி ஒரு பிரமிப்புத் தோற்றம் பெற எழுப்பியிருந்தவர் க. நா. சு. கேள்வி ஞானப்பிரமிப்பாய் இருந்த மௌனி ஸ்டார் பிரசுரத்தின் மூலம் 'அழியாச் சுடர்' தொகுப்பாக வாசிக்கக் கிடைக்கப் பெற்று பிரமிப்பு அனுபவமாக மாறப் புத்தகத்தைக் கொண்டு வந்தவரும் க. நா. சு. தான்.

சூட்சுமங்களில் இயங்கும் மௌனியின் கதைகளின் சூட்சுமங்களை உணர்ந்த க. நா சு. மௌனி கதைகள் தொகுப்பின் முன்னுரையில் எழுதுகிறார்: "மௌனியின் சிறுகதைகளை படிப்பது ஒரு புது அனுபவமாக அமைகிறது. ஒவ்வொரு தடவையும் படிக்கும்போதும் ஒரு புது அனுபவமாக அமைகிறது உலகத்தில் நல்ல இலக்கியம் எனப்படுவதெல்லாமே இப்படி முதன் முறையாக படிக்கும் போது புது அனுபவமும், மறுபடியும் மறுபடியும் படிக்கும் போது புதுப் புது அனுபவங்களையும் உண்டாக்க வல்லது என்பது விமர்சகர்கள் கண்டுள்ள உண்மை பிரும்மத்தைக் கண்டவர்கள் அவசியம் நேர்ந்தால் அதை வேறு வேறு விதமாக வர்ணிப்பது போல மௌனியின் கதைகளைப் படிப்பவர்கள் அதை வேறு வேறு விதமாக வர்ணிக்க இயலும. இதுவும் இது மிகச்சிறந்த இலக்கியம் என்பதற்கு ஒரு அத்தாட்சியே யாகும்"

இருவரில் ஒருவரை உணர்ந்தாலும் மற்றவரின் பெருமையை உணர முடிகிறது. பிரம்மத்தைக் கண்டவனில்லை நான். குறைந்தபட்சம் மேல் நிலைப் பிரக்ஞை (Higher Consciousness) நிலையின் உச்சியை (Summit) ஒரு அதர்ச்சியில் ஒருசாயலாகக(Glimpse)காணும் போது க. நா. சு. சொல்லும் உண்மையைக் காண முடிகிறது. எல்லாம சிகரங்கள் என்றாலும் சிகரங்களில் எவரெஸ்ட்டும் ஒரு சிகரம். எவரெஸ்ட் காணும வரை கண்டவைகளில் உயரமானது கண்டவனுக்கு அதுதான் உண்மையென இருந்து கொண்டிருக்கும் அபத்தம் இருக்கிறது. எவ்விதம் இந்த சாத்யங்களை ஒதுக்கி முட்டாளாக இருக்க முடியும் ஒருவனால் ஒரு முட்டாள் என உணர்ந்த நிலைமையிலும் கூட. எனவே அனுபவம் என்பது இலக்கியத்தில் புரிந்து கொள்ளலுக்கு அவசியமானது. எவ்வளவு அழுத்தமானது (In tense) இந்த அனுபவம என்பதைப் பொறுத்தும இலக்கிய படைப்பாற்றலும ரசனையும் இருந்து கொண்டிருக்கின்றன, இலக்கியம சொல்லபபட்ட சொற்களுக்கு அப்பால் இயங்குவதாக பிரக்ஞையில தூண்டலை ஏற்படுத்திக் கைவசம உள்ள அனுபவத்தில் ஒரு பிரக்ஞை நிலையையும் முற்றிலும் ஒரு அன

னியப் பிரதேசத்தில் பிரக்ஞை நிலையையும் கொடுத்து அதை அனுபவமாக மாற்ற வல்லது. அனுபவமாகக் காணாத வரையில் வாதப் பிரதிவாதங்களில் முட்டிக் கொண்டு ஆடுகளாகச் சந்தியில் நிற்பதைக் காட்சிகளாகப் பார்த்துக் கொண்டிருக்க வேண்டியது தான். உண்மை ஆடுகளாக இல்லாதிருப்பதால் ஜீவகாருண்யம் தடுக்காத வேடிக்கையும் கிடைத்துக் கொண்டிருக்கும். மேலிருவரியில் சொன்ன பிரதேசத்தில் நடப்பதில்லை க. நா. சு. வின் விமர்சனம் என்பதைக் கவனத்தில் கொள்ள வேண்டும்.

க. நா. சு. வின் விமர்சனங்களில் சொன்ன கருத்துக்கள் திரும்பத் திரும்ப சொல்லப்படுகின்றன என்றும் குற்றச்சாட்டு. வலியுறுத்தப் படுகின்றன என்பது புரிந்து கொள்ளுதல். கற்பித்தலில் நிரந்தர விளைவை ஏற்படுத்துவதற்குக் கருத்துக்கள் திரும்பத் திரும்பச் சொல்லி நினைவு படுத்தப் படுதலை ஒத்தது இது. மேலும் கட்டுரைகள் பல சந்தர்ப்பங்களில் கால இடைவெளிகளில் எழுதப்பட்டவை. அதில் ஒரேபுத்தக வடிவின் லட்சணங்களைத் தேடுவது அர்த்தமில்லாதது. மேலும் இவர்களுக்குப் புத்தக வடிவில் குறைகாணக் கிடைக்கும் என்பது புரிதலற்றதைக் காண்பிக்கும். விருப்பு வெறுப்புக்களில் பிரத்யட்சம் காணத் தவறுகிறவர்கள்.

முடிவுகளை மட்டும் சொல்லித் தப்பிக்கும் க.நா.சு. என்பதும் சுயஉழைப்பில் அவைகளைத் தெரிந்து கொள்ளும் ஆர்வமற்ற சோம்பல்...

க. நா. சு விமர்சனங்களில் வருகிற அந்நிய இலக்கியப் பெயர்களை ஒரு தாழ்வு மனப்பான்மையுடன் கணடித்து வந்திருக்கிறார்கள். இலககியம் ஒரு பிரதேசத்தின் மரபுகளிலிருந்து விடுபட்டு இந்நூற்றாண்டின் ஆரம்பத்திலிருந்தே உலக இலககியம் பொது மரபுகளில் இயங்க ஆரம்பித்து விட்டதை உணர வேண்டும். இதே நேரத்தில் அப்பிரதேசத்தின் தன்மைகளைக் கொண்டிருக்க வேண்டும் என்பதிலேயே பிரதேசத்திற்கென்று சிறப்பாகப் பிரிக்கப்படுவதையும் உணர வேண்டும. இப்படிப் பழைய இலக்கணங்கள் உடைந்து சிதறிப் போய் விட்டன. கண்டுபிடிப்புகளும் புதுப்பித்தல்களும் உலக அளவில் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன இந்தியத்தனமை எனப்படுவதும் உலக மரபு எனப்படுவதும் இலக்கியத்தின் ஒரே தன்மையைக் குறிப்பிடுகிறது. முரணானவையோ இரு வேறு இயல்புகளோ அலல. இந்நிலையில் அன்னிய இலக்கியப் பெயர்கள் அறிமுகமாக வேண்டிய அவசியத்தை உணர வேணடும் இவை படிப்பதற்குச் சிபாரிசு செய்யப்படுகிற பெயர்கள.

மேலும், சமீபத்தில் மேற்கத்திய இலக்கியங்களைத் தமிழில் இறக்குமதி செய்து கொண்டிருக்கிறார்கள என்று குற்றம் சொலல ஆரமபித்திருக்கிறார்கள். க. நா. சு. ஒரு காரணமாக இலக்கிய பிரக்ஞையுற்ற ஒரு சிறுபான்மையினரைப் பற்றிய குற்றச்சாட்டு இது. இதைப் போல ஆதாரமற்றதும் அபத்தமானதும் வேறில்லை. எது எது எனத் தெரியாதவர்கள் வாய்ப் புளிப்பை மாங்காய்ப் புளிப்பு என்று பருவமில்லாக் காலத்தில் சொல்கிறார்கள். உலக இலக்கிய மரபில் இந்தியத் தன்மை என்பதாக ஒன்று இருப்பதைத் தெரியாதவர்கள். இது எதுவோ கொண்டுவந்து புகுத்தப் பட்டதில்லை இருப்பது உணரப்பட்டு சொல்லப் படுகிறது. குற்றம் சாட்டுபவர்களை விட இச்சிறுபான்மையினர் சுயத் தன்மையில் பிரக்ஞையுடனனவர்கள்.

நடை, கசடதபற ஆகிய சிற்றேடுகள் தோன்றிய பிறகு இவை சம்பந்தப்பட்டவர்களுடன் நெருங்கிப் பழகிய முதியவர்கள் சிலரே தலைமுறைப் பிணக்கைப் பற்றிப் பேச ஆரம்பித்தார்கள் எழுதியதைவிடத் தனிஉரையாடல்களில் நிறையப் பேசினார்கள்; சுமந்து வரக் கூடியவர்களிடம் கட்டி அனுப்பி வைத்தார்கள் இந்த விவகாரங்கள் இரு தலை முறைகளின் மனப்பான்மையைக் காட்டுவதை விட நட்பின் விரோத பாவங்களைக் காட்டுவதாக இருந்தன. சில சம்பவங்களில் உறவு குன்றியதில் இளம் படைப்பாளிகளை அங்கீகரிக்காததற்குக் காரணம் கற்பித்துக் கொள்வதாகவே

---


## கசடதபற

(ஒரு வல்லின மாத ஏடு)

தனி இதழ் : 30 காசு

ஆண்டுச் சந்தா : ரூ 3/-

சந்தா அனுப்பும் அன்பர்கள் தங்களுடைய முகவரியைத் தெளிவாகக் குறிப்பிடவும். ஒவ்வொரு மாதமும் 7ந் தேதிக்குள் 'கசடதபற' இதழ் சந்தாதாரர்களுக்குக் கிடைக்காவிட்டால் உடன் தெரிவிக்கவும். கதை, கட்டுரை, கவிதைகள் அனுப்புகிறவர்கள் பிரசுரிக்க இயலாதவற்றைத் திரும்பப் பெறப் போதிய தபால் தலையுடன் அனுப்பிவைக்க வேண்டும்.

ஆசிரியர்: 'கசடதபற'

1 தேவடி தெரு

சென்னை-4

ஆரம்பத்தில் அமைந்து, பிறகு பரஸ்பரம் அங்கீகரிப்புக்காக இரண்டு தலைமுறைக்காரர்களும் உண்மைப் பிளவு இருப்பதை உணர ஆரம்பித்தார்கள். நனவிலி மனச் செயலாக ஆரம்பித்து நனவு மனச் செயலாக நேர்ந்து இப்படி பிரத்யட்சமானதாகவும் இது இருக்கலாம் தான்.

ஆனால் க. நா. சு. இந்த தலைமுறைச் சிக்கல்களில் சிக்கிச் சொல்லவில்லை. ஏன்?

கற்றல் தொடர்ந்த மனச் செயலாக இருந்து கொண்டிருப்பவன் என்றும் படைப்பாளியாக இருந்து கொண்டிருக்கிறான். இவனுக்கு எக்கட்டத்திலும் படைப்பாற்றல் குன்றிப் போவதில்லை கற்றல் குன்றாதவரை. இவன் கற்றலில் குழந்தையைப் போன்றவன். குழந்தையைப் போலத் தெரிந்துகொள்வதில் ஆர்வமுள்ளவன். உடம்புக்கு வயதாகிக்கொண்டிருந்தாலும் மனம் இளமையுடன் முதுமையின் அனுபவங்களைப் பெற்று இருக்க முடிகிறது. தலைமுறைகளுக்குள் வயது வித்யாசமிருந்தாலும் மன வித்யாசமில்லாமல் இருக்க முடிகிறது. உடம்பு மனதைப் பாதிக்கிறதென்றாலும் அதிகபட்சம் சோர்வைக் கொடுப்பதைத் தான் அதனால் பாதிக்க முடிகிறது. இதே நேரத்தில் மனதும் உடம்பைப் பாதித்து உற்சாகம் குன்றாமல் வைத்துக் கொள்கிறது. இரண்டின் இணக்கமாகக் காரியத்தில்பார்வை பாதிக்கப்படுகிறதில்லை. அதனால் தான் போலும் க. நா. சு.வின் பார்வை இளம் தலைமுறையின் பார்வையைத் திரித்து வக்ரமாகப் பார்க்காமல் இயல்பாகப் பார்க்க முடிகிறது போலிருக்கிறது.

இதனால் க. நா. சு.வின் விமர்சனம் மனப் பார்வை (Subjective) விமர்சனமாக இல்லாமல் பொருட் பார்வை (objective) விமர்சனமாக இருப்பதையும் காண முடிகிறது. எனவே, இது அவருடைய பார்வை என ஒதுக்கிவிட முடியாதவராக அவர் இருந்து கொண்டிருக்கிறார்.

க. நா. சு. ஏற்படுத்திய பிரக்ஞையில் இலக்கமுள்ள சிறுபான்மையினர் இன்னும் கூடுதல் பிரக்ஞையுடன் இருக்க வேண்டியவர்களாகிறார்கள். பூரணப் பிரக்ஞையை அடைவதில் சோர்வில்லாதவர்களாக இருக்கவேண்டியவர்களாகிறார்கள். இப்போதைய தமிழ்ச் சூழ்நிலையில் வெறும் படைப்பாற்றலுடன் இருந்தாலமட்டும் போதாது. க. நா. சு.வைப் போல், நிந்தனைக்கு அஞ்சிக் குன்றாத உணர்ச்சிவசப்பட்டு மனம் குழம்பாமல் தெளிவோடு, அங்கீகரிக்கப்பட்டவையின்பின் எழும் சுயப் பிரக்ஞையின்மையை முறைமைகளை நாசப்படுத்துகிற வல்லமையைப் பெற வேண்டும். அப்போது படைப்பாற்றல் முழு சக்தியில் இயக்குவதை உணரலாம். அப்போது தான் அது முழு வாழ்தல் ஆகும். ●

(12ம் பக்கத் தொடர்ச்சி)

இரண்டும் ஒன்றுக்கொன்று முரண்பாடான கருத்து நூல்கள். நீட்ஷே சர்வாதிகாரவாதி. இன்று அவர்தான் ஹிட்லருக்கு மூலகாரணம் என்று சொல்பவர்கள் உண்டு. Whitman ஜனநாயகவாதி. இருவரிடமும் எனக்கு ஈடுபாடிருந்தது என்பது குறிப்பிட வேண்டிய விஷயம்.

நீட்ஷேயின் கருத்துக்கள் மிகவும் புரட்சிகரமானவை. Beyond Good and Evil, Anti Christ, Thus Spake Zarathustra போன்ற நூல்கள் ஐரோப்பிய சிந்தனையின் போக்கைக் கணிசமான அளவில் பாதித்தவை. ஜெர்மன் வசனத்தில் நீட்ஷேயின் போக்கு மிகவும் புரட்சிகரமானது. மிகவும் காவியமயமான சிந்தனைகளைக் காவிய நயமேயற்ற வார்த்தைகளில் சொல்லி விடுகிற சமார்த்தியம் நீட்ஷேயிடம் உண்டு. இதைக் கற்றுக்கொள்ள நான் வெகுவாகப் பாடுபட்டேன் என்றால் அது மிகையாகாது. கருத்திலும் நீட்ஷே மிகவும் பிற்போக்கானது என்று கருதப்பட்ட மனுஸ்மிருதி சிந்தனைகளை ஆதரித்தார்—விஞ்ஞான ரீதியில். கிறிஸ்தவ நரகம், ஸ்வர்க்கம் பற்றிய சிந்தனைகளையும் தலைகீழாகப் புரட்டியவர் அவர். தைரியமாகச் சிந்திக்க அறிந்துகொள்வதற்கு நீட்ஷேயை ஒவ்வொருவரும் படிக்க வேண்டியது அவசியம். அவர் கருத்துக்களை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பதல்ல விஷயம். சிந்தனைத் தெளிவு, தீவிரம், அழுத்தம், அதைச் சொல்வதில் ஒரு உத்தி இவ்வளவும் நீட்ஷேயினால் எனக்கு ஏற்பட்ட பாதிப்பாகும். சமுதாய வாழ்விலே நம் ஏற்றுக்கொள்கிற பல அடிப்படையான விஷயங்களை ஒன்றுமில்லை என்று ஆக்கியவர் நீட்ஷே.

அதே அளவில் நாம் நல்லது என்று நம்பியிருப்பதெல்லாம் நல்லதல்ல, கெட்டது என்று நம்பியிருப்பதெல்லாம் கெட்டது அல்ல என்கிற சிந்தனையை ஐரோப்பாவிலே முதல் முதலாகத் தொடங்கித் தந்து, நல்லது தீயதைக் கடக்கும் ஒரு நியதியை உற்பத்தி செய்து தந்தவர் டாக்டர் ஸிக்மண்ட் ஃப்ராய்டு. அவர் சிந்தனைகள் காரணமாகக் குடும்ப உறவுகள் தளர்ந்தன. மனித வாழ்வின் அடிப்படை தனிப்பட்ட sex உணர்வு தான் என்று சொல்லி, கலை இலக்கியம் எல்லாவற்றிலும் புது நோக்குகளைச் சாத்தியமாக்கியவர் Freud. அவருடைய நூல்களிலே The Interpretations of Dreams என்கிற நூல் என்னை மிகவும் பாதித்த நூல். நாவலைதையும்விடச் சுவாரசியமான நூல் என்று இதை நான் சொல்லுவேன். இதை நான் 1931ல் பி. ஏ. கடைசி வருஷம் படித்துக் கொண்டிருக்கும் போது படித்தேன் என்று எண்ணுகிறேன்.

இதைத் தவிர சற்றேறக் குறைய அதே சமயத்தில் நான் படித்த Jack Londonனின் Martin Eden என்கிற நாவலும் என்னை வெகுவாகப் பாதித்தது. இலக்கிய கர்த்தாவாக வாழ விரும்பிய ஒருவன் எப்படிப்பட்ட சோதனைகளுக்குள்ளாவான் என்று Martin Edenனில் Jack London விவரிக்கிறார். இதை நான் இலக்கிய கர்த்தாக்களுக்கு மிகவும் அவசியமானதோர் நூலாக நினைக்கிறேன்.

இதற்கு முன் எனக்கு என்று, இந்தப் படிப்பெல்லாம் காரணமாக ஒரு தனித் தன்மை ஏற்பட்டுவிடவே அதற்குப் பின் படித்த நூல்களில் பலவும் என்னை இந்த அளவுக்கு Jack Londonனின் Martin Eden James Joyceசின் Dubliners Ezra Poundடின் விமர்சனங்கள், Freudடின் Psychoanalysis, Kiplingகின் Kim போலப் பாதிக்கவில்லை என்றுதான் சொல்வேன்.

படிப்பது முடிவில்லாத ஒரு காரியம். முடிவில்லாது செய்துகொண்டிருக்கிற இந்தக் காரியம் முடிவில்லாத பாதிப்புக்களை நாம் அறிந்தும் அறியாமலும் நமக்குள் விளைவிக்கிறது. இலக்கியாசிரியன் ஒருவனுக்குத் தெரியாத அளவில் அவன் எழுத்தில் விமர்சகன் காணக்கூடிய அளவில் பாதிப்புகள் இருக்கலாம் இருக்க வேண்டும் — இராமல் இராது. Thomas Mann. Romain Rolland, Anatole Francis, Selma Lagerlop, Vemer Von Heivenstan. Knut Hamsun Franz Kaffka, William Saroyan. Maxim Gorki, Dostavsky, Lady Mura aki இவர்களெல்லாம் நான் பின்னர் கண்டுகொண்ட நாவல், கதாசிரியர்கள். கவிகளில் டான்டேயையும் ஆங்கிலக் கவிகளையும் தவிர, மற்றவர்களைப் பின்னர்தான் கண்டு கொண்டேன் — Paul Velery Rainer Maria Rilke, Lorca, என்று பலரை. இதே போல நாடகாசிரியர்களாக Benevente. Ibsen, Pirendello இவர்களைக் கல்லூரி விட்ட பிறகுதான் கண்டுகொண்டேன். இவர்களுடைய பாதிப்பையெல்லாம் தெரிந்து கொள்ளும் சக்தி என் தனித் தன்மைக்கு அதற்குள் ஏற்பட்டுவிட்டது என்று சொல்லலாம்.

நான் படித்த முதல் தமிழ்ச் சிறுகதை பி. எஸ். ராமையாவின் வார்ப்படம் என்பதாகும். அதிலே ஒரு உருவமும், கருத்தும் அமைந்திருக்கிறது என்றும், அதுமாதிரித் தமிழ்க் கதைகள் என்னால் எழுத முடியும் என்றும் உணர்ந்து, தமிழில் சிறுகதைகள் எழுத ஆரம்பித்தேன். புதுமைபித்தனின் கதைகளில் சிற்பியின் நரகத்தையும், மௌனியின் கதைகளில் காதல் சாலை என்பதையும் நான் முதன் முதலில் படித்தேன். பிச்சமூர்த்தியின் வானம்பாடி என்கிற கதையையும், தாய் என்கிற கதையையும் படித்தபோது இந்த

மாதிரிக் கதைகள் நான் எழுதக்கூடாது என்று தீர்மானித்துக் கொண்டேன். அதே போல பெ. கோ. சுந்தரராஜனின் கதை சௌந்தரியமே சத்தியம் என்பதைப் படித்த போது அது என்னைப் பாதித்தது—இப்படி எழுதக்கூடாது என்கிற அளவில். தியாக பூமி என்கிற நாவல் கல்கியினுடையது வெளி வந்தபோது இதுமாதிரி நாவல் என்கிற பெயரில் எதுவும் எழுதிவிடக்கூடாது — கடவுள் காப்பாற்றுவாராக என்று தீர்மானித்துக் கொண்டேன்.

அதற்குப் பிறகு நாற்பதுக்களில் காப்பாற்றுவதற்குக் கடவுளைக் கூப்பிடவேண்டிய சந்தர்ப்பங்கள் பல பல எழுந்துவிட்டன. அவற்றை இங்கு விவரிக்க வேண்டிய அவசியம் இல்லை என்று எண்ணுகிறேன். தியாக பூமி முதல் அலை ஓசை வரையில் கல்கி எழுத்து என்னைப் பாதிக்கிற எழுத்தாகவே இருந்தது என்றுமட்டும் சொல்லுகிறேன். கல்கியின் எழுத்துக்கள் நல்ல நூல்கள்; கெடுதி செய்யும் சக்தி வாய்ந்த நூல்கள் என்று ஆரம்பத்தில் சொன்னேனே அந்த ரகத்தைச் சேர்ந்தவை.

பொதுவாக இன்றைய மனித குலத்தின் சிந்தனைகளைப் பெரும் அளவில் பாதித்திருப்பவை என்று Marxஸின் கருத்துக்களைச் சொல்ல வேண்டும். Man does not live by bread alone என்கிற பைபிள், மற்றும் ஆரம்ப சமய நூல்கள் பலவற்றின் கருத்தை மறுத்து, மனிதன் ரொட்டியினால்தான் வாழ்கிறான் என்று அப்பட்டமாகச் சொல்லி நிலை நிறுத்த முயன்றவர் Marx என்று ஒரு overimplification என்று சொல்வார்கள் அந்த எளிய வழியில் செல்லலாம். புத்தர் காலத்திலும், ஏசு காலத்திலும்கூட அப்படித்தான் மனித வாழ்வு இருந்திருக்க வேண்டும்; அதைப் பற்றிய வரையில் கண்ணை மூடி வாழ மனிதன் பழக வேண்டும். அப்போதுதான் அவன் வாழ்க்கைக்கு அர்த்தம் கூடும் என்று புத்தர், ஏசு போன்றவர்கள் கருதினார்கள்.

வாழ்க்கைக்கு அர்த்தம்கூட வேண்டாம்; சௌகரியங்கள் கூடினால் போதும் என்கிற அடிப்படை பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றியது நியாயம் என்றே சொல்ல வேண்டும். இதை ஏற்றுக்கொள்ளும் சூழ்நிலையை ஃப்ராய்டும், நீட்ஷேயும் அவரவர் அளவில் அமைத்துத் தந்தார்கள். இது உலகம் பூராவையும் பாதித்த ஒரு கருத்துப் புரட்சியாகும். அரசியல் ரீதியாக, மார்க்ஸை ஆதாரமாகக் கொண்டு ருஷ்யாவில் புரட்சி ஏற்பட்டதும், ஸ்டாலின் என்கிற ஒரு இரும்பு மனிதன் அந்தப் புரட்சி ஒடுங்கிவிடாமல் நிலைக்கச் செய்ததும் சரித்திரப்பூர்வமாக நம்மையெல்லாம் பாதித்துள்ள விஷயங்கள். ஆனால் அந்த ஸ்டாலின் பெயரைச் சொல்லாமலே ருஷ்ய சரித்திரம் இன்று எழுதப்படுவதையும் காண்கிறோம். இதுவும் ஒரு விதத்தில் கருத்துப் புரட்சிதான். இன்று இந்தியாவில் பழைய மரபின் சில அம்சங்கள் வேரூன்றுவதற்கும், சில அம்சங்கள் நம் வாழ்வை வளமாக்குவதற்கும் வழி காட்டிய மகாத்மா காந்தியை மறந்துவிட்டு இந்திய சரித்திரம் சில நாளில் சாத்தியமானால்கூட நாம் ஆச்சரியப்படுவதற்கில்லை. ஆனால் மகாத்மா காந்தியின் எழுத்துக்களும், கருத்துக்களும் நம்மையெல்லாம் சாதகமாகவோ, பாதகமாகவோ பாதித்திருக்கின்றன. நம்மில் ஒருவராலும் இதைத் தப்ப முடியாது.

அதே அளவுக்குத் தமிழர்களிடையே இரண்டு பாதிப்புக்கள் சொல்ல வேண்டும்— ஒன்று பாரதியார்; இது நம்மை மேலே செல்லத் தூண்டும் ஒரு பாதிப்பு. இரண்டாவது தூய தமிழ்வாதிகள்; என்னளவில் இது பின்னேறத் தூண்டும் ஒரு பாதிப்பு என்றே எனக்குத் தோன்றுகிறது. இந்த இரண்டு எதிர் மறையான பாதிப்புகளும் தவிர்க்க முடியாதனவாக இன்று நம்மால் உணர முடிகிறது இதே அளவுக்கு இல்லாவிட்டாலும், சற்றுக் குறைவான அளவில் என் எழுத்தை — ஏன் உங்கள் எழுத்தையும் தான் பாதித்திருப்பது — சமீப காலத்தில் தமிழ்ப் பத்திரிகைகளின் வளர்ச்சியாகும். பத்திரிகைகளில் வந்தாலொழியப் படிக்க மாட்டோம் என்று சொல்கிற வாசகர்கள் — தமிழ் வாசகர்கள் — இலக்கிய வளர்ச்சிக்கு எப்படிக் குந்தகம் விளைவிக்கிறார்கள், இன்னும் அதிகமாக விளைவிப்பார்கள் என்று பல இடங்களில் நான் சொல்லியிருக்கிறேன். இங்கு சொல்ல வேண்டிய அவசியம் இல்லை என்று எண்ணுகிறேன்.

எந்த எழுத்தாளனுக்குமே ஒரு தனித்வம் ஏற்படுகிறவரையில பாதிப்புகள் அதிகமாக இருக்கும்; கண்டு சொல்ல முடியும். தனித்வம் கண்டுவிட்ட ஆசிரியனைப் பாதித்திருக்கும் நூல்கள் பல, சம்பவங்கள் பல, திருப்பங்கள் பல அவன் மனதைவிட்டே, நினைவைவிட்டே நழுவி விடலாம். பின்னோக்கித் திரும்பிப் பார்க்க வசதி ஏற்படும்போது சில விஷயங்கள் நினைவுக்கு வந்தன—சொன்னேன். நானே நினைத்துப் பார்த்தால் வேறு சில நினைவுக்கு வரலாம்தான். வரக்கூடாது என்று சொல்ல என்னாலும் இயலாது — உங்களாலும் இயலாது. ஆனால் உலகத்தில் உள்ள எதுவும் எதனாலும் பாதிக்கப்படாதிருக்க முடியாது. அதனால்தான் மனிதன் ஜடமல்ல என்று எண்ணுகிறோம். பாதிப்புகளினால்தான் கலை இலக்கியம் முதலியன சாத்தியமாகி வளருகின்றன.

(இலக்கியச் சங்கக் கூட்டத்தில் முன்பு படிக்கப்பட்ட கட்டுரை)

# ப்ளாட்டோவின் கழுத்தும், க.நா.சு.வின் எழுத்தும்

ஆர். சுவாமிநாதன்

மனிதனுக்கு கழுத்து எதற்காக ஏற்பட்டது? ப்ளாட்டோ சொல்லுகிறார்: மேன்நிலை ஆத்மா அடங்கிய தலையையும், பசி, இதர உணர்ச்சிகள் அடங்கிய மற்ற அங்கங்களையும் பிரிப்பதற்காக. கீழ் அங்கங்களின் துர்ச்செயல்களிலிருந்துபுத்தியைக் காப்பாற்ற.

க. நா. சு. வின் கதாபாத்திரங்களின் கழுத்துக்கள் ப்ளாட்டோ அவைகளுக்கு ஏற்படுத்தியிருக்கிற பணியினைச் செவ்வையாய் செய்பவை. தங்கள் தலைகளால் மட்டுமே அவர் கதாபாத்திரங்கள் மனிதர்களாய் வாழ்கிறார்கள். கீழ் அங்கங்களின் துர்ச்செயல்களிலிருந்து தங்கள் புத்தியைக் காப்பாற்றிக் கொள்கிறார்கள்.

அநுபவத்தை மீண்டும் சிருஷ்டிப்பது தான் இலக்கிய ஆசிரியன் வேலை என்பார்கள். அநுபவம் என்றால சம்பவங்கள் அடங்கிய அநுபவம்தான் என்றில்லை; உயிருள்ள மனிதர்களை நம் கண்முன் நிறுத்துகிற அநுபவம் தான் என்றில்லை.

க. நா. சு. கையாளுகிற அநுபவங்கள் மனித வாழ்க்கையின் ஒட்டு மொத்தமான அநுபவம். இந்த அநுபவங்கள் தத்துவ தரிசிகளின் சலலடை மூளைகளில் சலிக்கப்படும் போது தததுவம் தனியாகிறது; ஆக, தத்துவம் அநுபவங்களின் சாரம்.

இந்த தத்துவங்கள்தான் க. நா. சு. கதாபாத்திரங்களை இயக்குகின்றன. அவர்கள் காரியங்களில் ஈடுபடுகிறார்கள்; ஆனால் அதையும் விட முக்கியமாக, காரணங்களை ஆராயத் துவங்குகிறார்கள்.

க. நா. சு. தன்னுடைய கதைகளில் பிரத்தியட்சத்தை எடுத்துக் கொண்டு தியானிக்கத் துவங்குகிறார் (contemplates reality) என்றே சொல்ல வேண்டும்.

'இலக்கியத்தில் சிறந்தது எல்லாமே உணர்ச்சியைக் கிளப்புவதுடன் திருப்தியடைந்து விடாமல் உணர்ச்சியை சமனப்படுத்துவதிலும் கவனம் செலுத்துகின்றன. (இலக்கிய விசாரம்; பக்கம் 56)

க. நா. சு., 'தான் ஒதுங்கி நின்று சாக்ஷிபூதமாகச் சொல்வதுடன், வாசகனையும் சாக்ஷியாக்கிக் காட்டுகிற காரியத்தை செய்கிறார்!' (இ. வி. பக். 56)

க. நா. சு. வுக்கு, 'கதை முக்கியம் அல்ல; மனிதர்களும் அந்த மனிதர்களுக்கு இடையே உள்ள உறவுகளுந்தான் முக்கியம்'. (ஒருநாள்; முன்னுரை)

இந்த உறவுகள் பெரும்பாலும் குடும்ப உறவுகள் தாம்! சற்று மிஞ்சிப் போனால் சமூக உறவுகள். ஆனால் இவர் கதைகளில் வருகிற மனிதர்கள் இந்த உறவுகளோடு திருப்தி அடைந்துவிடுவதில்லை. இந்த உறவுகளையே ஆழ்ந்த பரிசீலனைக்குப் பிறகுதான் ஏற்றுக் கொள்கிறார்கள். ('குடும்பத்தை லட்சியமாகக் கொண்ட இடத்தில்தான் மனித குலத்தின் உயர்ந்த கிளைகள் தோன்றியிருக்கின்றன. அந்தக் கிளைகளில்தான் மகோன்னதமான தனி மனிதர்கள் தோன்றி யிருக்கிறார்கள். யூதர்களும், ஹிந்துக்களும், சீனர்களும் உலகத்தில் வேறு எந்த ஜாதியினரையும்விட அதிக நாட்கள் நிலைத்து விட்டார்கள். ஏன் என்றுகேட்டு 'இந்தக் குடும்ப உறவு' என்கிற முடிவுக்கு வர எந்த ஆராய்ச்சியாளனுக்கும் இன்னும் தைரியம் வரவில்லையே!' (ஒரு நாள்; பக்கம் 70-71) இந்த உறவுகளுக்கும் மேலே தனி மனிதனுக்கும் பிரபஞ்சத்துக்கும் உள்ள உறவு......இப்படிச் சிந்திககிறார்கள்.

க. நா. சு. வின் கதாபாத்திரங்கள் மரபை ஏற்றுக் கொள்ளும் போதும் மரபு என்பதற்காக ஏற்றுக் கொள்வதிலலை. தத்தமக்குத் தோன்றிய அளவில் சிந்தித்த பிறபாடே தம்முடைய சொந்த முடிவாகவே ஏற்றுக் கொள்கிறார்கள்.

க. நா சு.வின் எழுத்தில் ஐரனி (irony) ஒரு முக்கியமான அம்சம். அதிலே லேசான

கசப்பும், விரக்தியும் இழையோடும் எனினும், குரோதமற்ற லேசான பரிகாசம்கலந்த த்வனி அது. மனிதர்களை அனுதாபத்துடன் எடை போடுகிற ஐரனி.

கிராமத்து வாழ்விலே நம்பிக்கை இழந்து விட்டார்கள் ஜனங்கள் இன்று. அதற்குக் காரணம் என்று எதைச் சொன்னால் என்ன? உண்மை ஒன்று நிலைத்துவிட்டது. பட்டணத்து வாழ்வு மனிதர் மனதை மயக்கிவிட்டது. உப்புச் சப்பில்லாத வாழ்க்கைதான் அது; அவசரத்திலே, தின்கிற சோறு கையில் ஒட்டாது; ஒட்டம் பிடிக்கிற அவசர வாழ்க்கை தான் அது. அந்த அவசரந்தான் மனசை மயக்கியதோ? யார் சொல்ல முடியும்? தெய்வ அமைதி அலுத்துவிட்ட சமயத்தில் ராக்ஷஸ அவசரம் அலுக்காது இருக்க இடம் இருக்கும் அல்லவா? (ஒரு நாள்; பக்கம் 60—61)

உலகத்து மனிதர்கள் ஏதேதோ செய்கிறார்கள். செய்துவிட்டு அதன் பலா பலன்களைப் பற்றிப் பெரிதாக எண்ணமிட்டுக் கொண்டிருக்கிறார்கள். அந்தச் செயல்களோ, அவற்றின் பலா பலன்களோ யாருக்கும் எவ்வித முக்கியத்வமும் வாய்ந்தவை அல்ல என்பதை அவர்கள் யாரும் நினைத்துப் பார்ப்பதில்லை. உலகம் என் ஒருவனுக்காக மட்டும் இல்லை என்கிற நினைப்பு எவனுக்கு எப்போது ஏற்படுகிறது? சாதாரணமாக ஏற்படுவதேயில்லை. அதையேதான் மனித குலத்தின் சோக அஸ்திவாரம் என்று சொல்ல வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. (அசுரகணம்; பக்கம் 75, 76)

வாழ்க்கைப் பிரவாகம் தன்னுள் உருவாக்கும் உணர்ச்சிகளை எல்லாம் கலை சாத்தியமாக்குகிற உண்மையுடன் எடுத்துக் கூறும் சூட்சும நோக்கு க. நா. சு. பால் அமைந்துள்ளது.

க.நா.சு. பிரத்தியட்சத்தை அதனுடைய சுத்தமான வடிவத்தில் நமக்குக் காட்டுகிறார்; அதன்மூலம் அவர் காட்டுகிற உலகம் நம்முடைய புலன்களுக்குக் கலைமெருகு ஏற்றப்பட்டதாகத் தெரிகிறது. பிரபஞ்சத்தின் மௌன மொழியிலிருந்து சத்திய தரிசனத்தை எதிர் நோக்குகிற ஞானியாக அவர் காட்சி தருகிறார். மனோதத்துவ ஆவலையும், சமூக தேவைகளையும் மீறிய தத்துவ வேட்கை (metaphysical need) அவர் எழுத்துக்களில் காணக்கிடைக்கிறது. இந்த வகையில் இவர் கதே, தாமஸ் மன் போன்ற தார்மீகக் கற்பனை (moralistic imagination) நிரம்பிய மேலை நாட்டு நாவலாசிரியர்களுடன் ஒப்பிடும்படியான இலக்கிய அந்தஸ்து பெறுகிறார். ●

---

# காஃப்காவும் ஒரு தமிழ் எழுத்தாளரும்

**க. நா. சுப்ரமண்யம்**

காஃப்கா என்கிற பெயரை முதல் முதலாக நான் புதுமைப்பித்தன் மூலமாகத்தான் கேள்விப் பட்டேன் என்று எண்ணுகிறேன். 1937 மத்தியில் இருக்கலாம். Dorothy Norman என்பவருடைய Twice A Year Press வெளியீடாக வந்த அமெரிக்கப் பதிப்பு ஒன்று எப்படியோ second hand work ஆக நண்பர் புதுமைப்பித்தனுக்குக் கிடைத்தது. அதில் ஒன்றிரண்டு கதைகளையும் அவர் மொழி பெயர்க்க உத்தேசித்து மொழி பெயர்த்தார் என்று எண்ணுகிறேன். A Franz Kafka Miscellaneous என்கிற பெயருடன் வெளி வந்த அந்த நூலில், காஃப்காவிலிருந்து பல பகுதிகள் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப் பட்டிருந்தன; காஃப்காவைப் பற்றியும் ஒரு சில கட்டுரைகளும் இருந்தன. ஒருநாள் அந்த நூலை என்னிடம் தந்து அதை ஒரே நாளில் படித்துவிட்டுத் திருப்பித் தந்துவிட வேண்டும் என்கிற நிபந்தனையுடன் கொடுத்தார் புதுமைப்பித்தன். காஃப்காவைப் பற்றிய கட்டுரைகளை நான்படிக்கவில்லை; எனக்கு விமர்சனத்தில் அன்றும் அவ்வளவாக நம்பிக்கை கிடையாது; இன்றும் கிடையாது. ஆனால் அந்த நூலில் இருந்த காஃப்கா மொழி பெயர்ப்புகளையெல்லாம் உட்கார்ந்து இரவோடு இரவாகப் படித்து விட்டேன்.

இரவு எப்போது தூங்கினேன் என்கிற நினைவில்லை. ஆனால் காஃப்காவைப் படிப்பதும், தூக்கத்தில், கனவில் ஒரு உலகத்தைக் காண்பதும் ஒன்றுதான் என்று சொல்ல வேண்டும் என்று எனக்குத் தோன்றியது. nightmares என்று சொல்லுவார்களே அது போன்றவை காஃப்காவின் கதைகளும்,

முடிவுறாத நாவல்களும். "கனவு காண்பது போல் இருந்தது" என்று சொல்லி நான் மறுநாள் புதுமைப்பித்தனிடம் அந்த நூலைத் திருப்பித் தந்தபோது, புதுமைப்பித்தன் விமர்சனப்பகுதியில் பல இடங்களில் காஃப்வின் கதைகளில் ஃபிராய்டின் மனோதத்துவ அலசல் கனவுகள் பலமான இடம் பெற்றிருப்பதாகப் பலரும் எழுதியிருப்பதைக் குறிப்பிட்டு விட்டு, அவருடைய டையரிகளில் அவருடைய கனவுகள் பெரும் அளவுக்கு இடம் பெற்றிருப்பதாகவும் அவருடைய பல சிறுகதைகளும், நாவல்களில் ஒன்றும் இன்னும் ஆங்கிலத்தில் கூட மொழி பெயர்க்கப் படாதிருப்பதாகவும் கூறினார். அதற்குப் பிறகு ஒரு வழியாக காஃப்காவின் நூல்களையும், கதைகளையும் ஜெர்மன் மூலத்தில் தேடிப் பிடித்துப் படித்தேன். Trial என்கிற ஆங்கில மொழி பெயர்ப்பு 1937ல் தான் வெளிவந்தது. பின்னர் டையரிகள், பல கதைகள் எல்லாம் வரிசையாக வெளிவந்தன.

இந்தக் கதைகளில் நானும் புதுமைப்பித்தனும 1937 மத்தியில் படித்த 'Metamorphosis'—கூடுவிட்டுக் கூடு பாய்தல்—அல்லது மாற்றம் என்கிற கதையைப் பற்றிப் படித்து விட்டு நாங்கள் பேசிக் கொண்டதும் எனக்கு ஞாபகம் இருக்கிறது. அந்தக் கதையைப் படிக்காதவர்களுக்கும், படித்துவிட்டு மறந்து விட்டவர்களுக்குமென்று (அப்படி மறப்பது என்றும் சாத்தியமில்லை என்றே நான் நினைத்தாலும் கூட) இங்கு நினைவு படுத்துகிறேன்.

மிகவும் அருவருப்பை உண்டாக்கும் கதை அது. ஊர்சுற்றி வியாபாரி ஒருவன்—அவன் வாலிபன்—ஒருநாள் காலையில் எழுந்து பார்த்ததும் திடீரென்று தான் ஒரு கரப்பான் பூச்சியாக மாறியிருப்பதை உணருகிறான். அவன் பெற்றோர்கள்—தங்கள் பொருளாதாரக் கதி மோக்ஷம் அவன்தான் என்று எண்ணியிருப்பவர்கள் —கரப்பான் பூச்சியாக மாறிவிட்ட தங்கள் பிள்ளையோடு, அருவருப்புடனும், அலக்ஷியத்துடனும் வசிக்க வேண்டி வருகிறது. இதுதான் கதை.

இந்தக் கதை புதுமைப்பித்தனுக்கு—எனக்கும்தான்—ஒரு விதத்தில் பொருத்தமாக இருந்ததை நாங்கள் இருவருமே பேசிக் கொண்டோம், உணர்ந்தோம். புதுமைப்பித்தன் தன் தகப்பனரிடம் சண்டை போட்டு கொண்டு வீட்டை விட்டு வெளியேறியவர்; தன் தகப்பனருடைய அருவருப்பையும், அலக்ஷியத்தையும் சம்பாதித்துக்கொண்டவர். அதே போல ஆங்கிலத்தில் எழுதுவதற்கென்று பழக்கப் படுத்தப் பட்டிருந்த நான் என் தகப்பனரின் ஆலோசனையை அவமதித்து தமிழில் எழுதத் தொடங்கி அவர் விரோதத்தை, அலக்ஷியத்தை சம்பாதித்துக் கொண்டவன். புதுமைப்பித்தனின் தகப்பனரும், என் தகப்பனருமே உலக வாழ்க்கையில் ஓரளவுக்கு வெற்றி பெற்றவர்கள்; நாங்கள் இருவரும் ஓரளவுக்குத் தோல்வியுற்றவர்கள்.

"என் தகப்பனர் காஃப்கா படிக்க மாட்டார்" என்று தன் உணர்ச்சியைச் சொன்னர் புதுமைப் பித்தன்.

"என் தகப்பனர் படிப்பார்" என்றேன் நான்.

காஃப்காவின் வாழ்வும் இலக்கியமுமே பூரணமாக அவருக்கும், அவர் தகப்பனருக்கும் இடையே ஏற்பட்டுள்ள உறவுகள் காரணமாக எழுந்தவை, தோன்றியவை என்று சொல்லுவது வழக்கம்— ஜீவிய சரித்திரத்தையே ஆதாரமாகக் கொண்டு இலக்கிய விமர்சனம் செய்கிற ஒரு ஐரோப்பிய கோஷ்டி இப்படித்தான் அடித்துச் சொல்லுகிறது. இதே போலத் திருமணங்கண்டு பயந்து ஒதுங்கிய காஃப்கா மனப்பான்மையே அவர் சிறுகதைகளைச் சமைத்தன என்று சொல்லுகிற கோஷ்டி ஒன்றும் உண்டு. இரண்டுக்கும் இடையில் காஃப்கா ஒரு கனவுலகத்தில் வாழ்ந்து அந்தக் கனவுலகத்தைச் சாதாரண உலகத்தைவிட அதிக உண்மையானதாகக் கண்டு தீட்டினர் என்று சொல்லுவதும் பொருந்தும். எழுதுவது கலையாக அல்லாமல் ஒரு வாழ்க்கை நியதியாக, இந்திய அர்த்தத்தில் வாழ்க்கைத் தர்மமாகவே அவருக்குத் தோன்றியது. இந்தத் தர்மத்தை அவர் தனக்காகவன்றி பிறருக்காக மேற்கொள்ளவில்லை. ஆகவேதான் எழுத்துக்களைப் பிரசுரிக்கத் தேவையில்லை என்று தன் நண்பரிடம் தெரிவித்து உயில் எழுதி வைத்து விட்டுப் போனர் அவர். அதே போல அவர் தன் தகப்பனருக்கு எழுதிய ஒரு கடிதமும் இருக்கிறது — தன் தோல்விக்கெல்லாம் காரணம் தன் தகப்பனர்தான் என்கிற அளவில் குற்றம் சாட்டுகிறமாதிரியே எழுதப்பட்ட கடிதம் அது. அதையும் ஒரு இலக்கிய நூலாகவே கருதலாம்.

இரண்டு முடிவுறாத நாவல்கள், பல உருப்பெற்ற சிறப்பான சிறு கதைகள், பல கடிதங்கள், சில டையரிகள்—இவைதான் காஃப்காவின் நூல்கள். அவர் தனது இளமை பிராயத்திலிருந்து நாற்பதியோராவது வயதில் இறந்தது வரையில் எழுதிய தெல்லாம் ஜெர்மன் மொழியிலும், பின்னர் மொழி பெயர்ப்பிலும் பிரசுரமாகியுள்ளன. இவற்றைப் படிக்கும் போது காஃப்காவின் உருவம் இலக்கிய உருவம், தனித்தன்மை, personality—பளிச்சிடுகிறது. கரப்பான் பூச்சி உலகத்தை நோக்குகிறது காஃப்காவின் நூல்களில்—இந்தக் கரப்பான் பூச்சிக்கு எழுத்துக் கலை கைவந்திருந்தது—தன் நோக்கைப் பூரணமாக எழுத்தில் வடித்துக் காட்ட முடிந்தது, இந்த மேதையான கரபபான் பூச்சியினல். முக்கியமாக இரண்டு யுத்தங்களுக்கு மத்தியில் நசுக்குண்ட ஐரோப்பிய மக்களின்

நிலைமை காப்பான் பூச்சியினுடையது போலத் தான்—helpless morally, pointless ஆக இருந்தது. இந்த pointlessness, helplessness இரண்டையும் காஃப்கா அளவுக்கு வார்த்தைகளில் வடித்துத் தந்த கலைஞர் ஐரோப்பிய இலக்கியத்தில் வேறுயாரும் இல்லை. அதுதான் காஃப்காவின் பெருமை.

வேதாந்தத்தில் சொல்லுவார்கள்—நிஜ உலகம் என்று நாம் நம்புவதைப் போலவே நமது கனவுகளில் வருகிற உலகமும் நிஜமானதுதான்—அந்த அளவுக்கு நிஜமானதுதான் என்று சொல்லுவார்கள். காஃப்காவின் கனவுலகம் நிஜமான உலகமாக உருப்பெறச் செய்த அந்த எழுத்துக்கலை வன்மையானது—இதற்கு முன் யாரும் சாதிக்காதது.

'ஒரு நாயின் ஆராய்ச்சிகள்' என்கிற கதையை எடுத்துக் கொள்வோம். இந்த நாய் தனது ஆராய்ச்சியின் ஆரம்பமாக ஒன்றை ஏற்க மறுக்கிறது. நாய்கள் மனிதனுக்கு அடிமைப்பட்டவை என்று ஏற்க மறுத்துத் தன் ஆராய்ச்சியைத் தொடங்குகிறது. நாய் உலகத்தின் அடிப்படையான அம்சங்கள் எவை, எவை? நாய்களுக்கான உணவு எங்கிருந்து, எப்படிக் கிடைக்கிறது? பூமியிலிருந்து கிடைக்கிறது என்றும், தங்களுக்கு உணவளிக்கும் பூமியை முகர்ந்து அதற்கு நீர் வார்க்க வேண்டும்—அது நாய்களின் கடமை என்றும் எல்லா நாய்களும் அறிந்திருக்கின்றன. உணவு தேடும் நாய் பூமியைப் பார்ப்பதில்லை, வானத்தைப் பார்த்தே குலைக்கிறது என்று விஞ்ஞானியான நாய் கண்டறிந்து வைத்திருக்கிறது. இது ஏன் என்று விசாரிக்கிறது. மனிதர்கள் இல்லை என்று கற்பனை செய்து கொள்வது நாய்களுக்கு சுபாவமாகி விட்டது—கடவுள் இல்லை என்று மனிதன் நினைப்பது இந்தக் காலத்தில் சுபாவமாகி விட்டது போல. காஃப்காவின் முடிவுறாத நாவல்களைப் போலவே இதுவும் முடிவுறாத ஒரு கதை.

'விசாரணை' என்கிற நாவலில் குற்றம் சாட்டப்பட்டவன்—என்ன குற்றமோ, யாரால் அவன் குற்றம் சாட்டப்பட்டு கைது செய்யப்பட்டானோ—என்னவானால் என்ன? தான் குற்றம் செய்தவன்தான் என்கிற எண்ணம் கதாநாயகனுக்கு ஏற்பட்டு விட்டதாகவே தான் காஃப்கா வருணிக்கிறார். தன்னையே நாயும், பூச்சியும் ஆக்கிக் கொள்கிற விதத்தை காஃப்கா, நமது சைவப் பெரியார்களைப் போலவே அறிந்திருந்தான் என்று புதுமைப்பித்தன் ஒரு தரம் சொல்லி, நான் கேட்டதுண்டு. காஃப்காவின் எழுததிலே ஒரு தோல்வி, ஒரு கசப்பு மனப்பான்மை, ஒரு frustration தொனிப்பது தெளிவாகவே தெரிகிறது. இந்த விஷயங்களில் நமது புதுமைப்பித்தன் காஃப்காவுக்கு ஈடு சொல்லக் கூடியவர்தான்.

1937ல் காஃப்காவின் எழுத்து எனக்கு முதல் முதலாகப் புதுமைப்பித்தன் மூலம் பரிச்சயமாயிற்று. அதற்குப் பிறகு பல தடவைகள் அவர் நூல்களை ஆங்கிலத்திலும், ஜெர்மன் மொழியிலும் படித்திருக்கிறேன். இப்படி ஒருதரம் அண்ணாமலை சர்வகலாசாலையில் The Great Wall of China என்கிற நூலைப் படித்து விட்டுத் திருப்பித்தர எடுத்துப் போகும்போது சிதம்பரத்தில் 'மௌனி'யைச் சந்தித்து அவரிடம் "இதைப் படித்துப் பாருங்கள். உங்களுக்குப் பிடிக்கலாம்" என்று தந்தேன். மறுநாளே பூராவையும் படித்து மௌனி அந்தப் புஸ்தகத்தைத் திருப்பித் தரும் போது, "இந்த நூல்களை நீங்களும் மற்றவர்களும் எதற்காகப் படிக்கிறீர்களோ, எனக்குத் தெரியவில்லை. இந்த காஃப்கா எனக்காகவே எழுதியிருக்கிறான்" என்றாரே பார்க்கலாம்.

ஒரு சிறந்த இலக்கியாசிரியனுக்கு இதை விடச் சிறந்த tribute வேறு ஒருவரும் சொல்ல முடியாது என்றே எனக்குத் தோன்றுகிறது.

Sorry—எழுதி முடித்த பிறகு தலைப்பை மாற்றி, "காஃப்காவும் மூன்று தமிழ் எழுத்தாளர்களும்" என்று சொல்ல வேண்டும் என்று தோன்றுகிறது. அப்படியே வைத்துக் கொள்ளுங்களேன். ●

## இலக்கியச் சிந்தனை, சென்னை.

இரண்டாவது ஆண்டு விழா

நாள்: 13—4—1972 வியாழன் மாலை 6 மணி

இடம்: ராஜேஸ்வரி கல்யாண மண்டபம்

தலைவர்: திரு. நா. மகாலிங்கம்

1971ம் ஆண்டின் தேர்ந்தெடுக்கப்பட்ட 12 சிறந்த சிறுகதைகளின் விமரிசகர்:

திரு. சுந்தர ராமசாமி

சிறப்புரை: Dr. S. K. நாயர்
—"சுதந்திரத்திற்குப் பிறகு தமிழ் நாவல்கள்"

1971ம் ஆண்டின் சிறந்த சிறுகதையின் ஆசிரியருக்குப் பாராட்டு. அவரும் கலந்துகொள்வார்.

1971ம் ஆண்டின் 12 சிறந்த சிறுகதைகள் கொண்ட தொகுதி வெளியீடு.

(4ம் பக்கத் தொடர்ச்சி)

போன்றது. வார்த்தைகளில் அகப்படாதது. பக்திமான்கள் வார்த்தைகளுக்கு அகப்படாத அக்கடவுளைத் தேவாரமாகவும், நாலாயிரமாகவும் பாடிக் காண முயன்றார்கள். அதையே தான் இலக்கிய அளவில் இலக்கிய விமரிசனம் செய்து பார்க்க முயலுகிறது. முடியாது என்று தெரிந்திருந்தும் செய்து பார்க்கிற அளவில் கைநீட்டி வானைத் தொடச் செய்யப்படும் முயற்சி சிறப்பானது; உற்சாகம் தருவதுமாகும். எப்படித் தனிமையில், தனித்வத்தின் வார்த்தை உறவாக இலக்கிய நூல் உண்டாகிறது எனபதை இலககிய விமரிசனம் எடுத்து சொல்வதுடன், அடுத்த படியில் அது இலக்கியமாக ஒவ்வொரு வாசகனுக்கும் ஒவ்வொரு அம்சமாகக் காட்சி தருவது எப்படி என்பதையும் இலக்கிய விமரிசகன் எடுத்துச் சொல்ல வேண்டும். இரண்டாயிரம் வருஷ விமரிசன வளத்தில் மேலைநாடுகளில்கூட இம்முயற்சி அதிகமாக நடைபெறவில்லை என்றுதான் சொல்லவேண்டும். ஆனால் அதற்கு அவசியம் இன்று இல்லை என்று சொல்ல முடியாது.

ஒரு நூல் சிருஷ்டியாகிற விதத்தை நாம் அறிந்து கொள்வதால அதைப் பற்றிய அளவில அதை அதிகமாக அனுபவிப்பது சாத்தியப்படுமா என்பது அடுத்த கேள்வி. ரசத்தையும், கடிகாரத்தையும் உதாரணம் சொல்லிப் பயனில்லை. இலக்கியத்தைப்பற்றிய வரையில் நம் அறிவுபூராவுமே எந்த நல்ல சிருஷ்டியையுமே அனுபவிக்க நமக்கு உதவும் என்று தான் சொல்லவேண்டும். வார்த்தைகள், வாக்கியங்கள், கருத்துக்கள், உருவங்கள் எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்ட ஒரு தனித்வத்தையும் கணிக்க இலக்கிய விமரிசனமும் வார்த்தைகளின் உதவியைத்தான் நாடுகிறது. அந்த வார்த்தைகளுக்கான பலமும் பலவீனமும் இலக்கியத்தைப் போலவே இலக்கிய விமரிசனத்துக்கும் உண்டு. இலக்கிய விமரிசனத்தின் அளவைகளும், எல்லைகளும் வார்த்தை அளவைகளையும், எல்லைகளையும் பொறுத்தவை. முடிவில்லாத ஒரு முயற்சி இது என்றுதான் சொல்லவேண்டும். எத்தனை சொன்னாலும், சொல்லவேண்டியது, பாக்கியிருப்பது புலனாகிக்கொண்டேதான் இருக்கும். மேலே மேலே என்கிற ஏக்கம், மற்றக் கலைகளைப் போலவே, இலக்கிய விமரிசனததுக்கும் உண்டுதான். அதன் கலை நயமே அதில்தான் அடங்கியுள்ளது.

நல்ல நாவல் என்றால் என்ன? நல்ல சிறுகதை என்றால் எனன? நல்ல கவிதை, காவியம் என்றால் என்ன? என்று சொல்லி இலக்கணம் வகுக்கச் செய்யப்படுகிற முயற்சிகள் எல்லாமே இலக்கிய அளவில் தோல்விகள்தான். ஏனென்றால் சொல்லி முடித்தவுடனேயே அவ்விலக்கணத்தை இலக்கணம் மீறி நாவலோ, சிறுகதையோ, கவிதையோ எழுதுகிற ஒரு இலக்கிய மேதை தோன்றிப் புது இலக்கணத்துக்கு அவசியம் ஏற்படுத்தி விடுகிறான். இந்த நிலையை இலக்கிய விமரிசகன் (பணடிதர், புலவருக்கு எதிர்மாறாக) ஏற்றுக்கொண்டே தொடர்ந்து விடாப்பிடியாக இலக்கிய விமரிசனம் செய்கிறான். பூரணத்வம், லக்ஷியம் என்பதை இலக்கியத்தில் தொடர்பு அளவிலே இதற்கிது என்று, relative உறவு சம்பந்தமாகத்தான் கூறமுடியும். டாஸ்டாவ்ஸ்கியைப் போன்ற நாவலாசிரியன் வேறு கிடையாது உலகிலே என்று சொல்லுகிற அதே மூச்சிலே, இலக்கிய விமரிசகன் டாஸ்டாவ்ஸ்கியின் நாவல்களிலும் 'ஷொட்டுக்'கள், குறைபாடுகள் காணாமல் இல்லை என்று சொல்லவேண்டும். அதற்காக டாஸ்டாவ்ஸ்கிக்கும் பின்னர், இன்று டாஸ்டாவ்ஸ்கியைப் போலவே எழுதியவனைப் பெரிய நாவலாசிரியனாகவும் நாம் கருதுவதில்லை, அவனைப் படிக்கவேண்டிய அவசியமேயில்லை என்று முடிவு கூறினாலும் கூறிவிட முடியும். இத்தனைக்கும் அப்பால் டாஸ்டாவ்ஸ்கி உயர்ந்து நிற்கிற விஷயத்தை ஆணித்தரமாகவே இலக்கிய விமரிசகன் எடுத்துக் காட்டிவிடுகிறான். எப்படிச் செய்கிறான் என்பது விமரிசகனின் தனித்தன்மை, சாமர்த்தியம்.

குறிப்பிட்ட ஒரு இலக்கியத்தின் தரம் பூராவையும் இலக்கிய விமரிசனம் மூலம் எடுத்துச் சொல்லிவிட முடியுமா என்று கேட்டால், முடியாது என்றுதான் பதில் தரவேண்டும். அதனால்தான் ஷேக்ஸ்பியரையும் டாண்டேயையும் பற்றி இத்தனை விமரிசன நூல்கள் தோன்றியும் (பள்ளி நூல்களைப்பற்றி இப்போது விவாதிக்க வேண்டாம்) இன்னும் பல நூல்கள் தோன்றிக்கொண்டேயிருக்கின்

---

## ஏற்றமும் இறக்கமும்

பல்லியும் முதலையே
புல்லும் மூங்கிலே
மனிதனும் தெய்வமே.

தெய்வமும் மனிதனே
மூங்கிலும் புல்லுதான்
முதலையும் பல்லியே.

க. நா. சுப்ரமண்யம்.

## ஏன் வில்லி காதறுத்தான்?

(க. நா. சு.வுக்கு)

ஏன் வில்லி காதறுத்தான்?

எழுதலேம் என்று

கழுத்தறுத்தார்; பார்த்தான்;

பதிலுக்குத் தானுமறுத் தான்.

—ஞானக்கூத்தன்

---

றன. இருக்கிற ஒரு தேவையை அவை பூர்த்தி செய்வது போல இருக்கின்றன. ஒரு குறிப்பிட்ட சிறுகதையையோ, கவிதையையோ நாவலையோ அலசிப் பார்த்து அதிலுள்ள இலக்கிய நயம், அம்சம், தரம் எல்லாம இவ்வளவு தான் என்று எடைப் போட்டுச் சொல்லிவிட முடியாது. ஆனால் இன்னின்ன நயங்கள், தரங்கள், அம்சங்கள் இப்படி இப்படியாக ஏற்பட்டிருக்கின்றன என்று சுட்டிக்காட்ட முடியும். இலக்கிய உருவத்தையும், அந்த உருவத்தை நமக்கு நிர்மாணித்துத் தருகிற வார்த்தைகளையும், ஆசிரியரின் கருத்துக்களையும், சூழ்நிலையையும், அதனால் எழுந்த கோயிலையும், குச்சையும், இலக்கிய விமரிசனம் நல்ல வாசகனுக்குச் சுட்டிக்காட்ட முயலுகிறது. இந்த நூலின் நோக்கம் இது என்று சொல்லும் போதோ வார்த்தைகளால் எழுந்த இதன் நோக்கம் பலதரப்பட்டது, இதிலே பல கோணங்களும் திருப்பங்களும் தொனிக்கின்றன என்பதையும் காட்ட இலக்கிய விமரிசனம் பயன்படுகிறது. இதோ கதவு, திறந்து கொண்டு உள்ளே போகலாம் என்றோ; இதோ மலர், நுகரலாம் என்றோ; இதோ பாதை, நடக்கலாம் என்றோ நல்ல வாசகனுக்குச் சொல்லிவிட்டு நகர்ந்துவிடுவதுதான் இலக்கிய விமரிசகன் செய்யவேண்டிய காரியம் என்று நான் எண்ணுகிறேன். இலக்கியப் பாதையிலே வழிநெடுக நடப்பது விமரிசகனின் கடமையல்ல. கதாகாலக்ஷேபக்காரர்கள், ஒருவரிக் கவிதைக்கு எட்டுப் பக்கம் பிரசங்கம் செய்பவர்கள் செய்கிற காரியம் அல்ல இலக்கிய விமரிசகன் செய்ய வேண்டிய காரியம். நல்ல கவிதையை (சிறுகதையையோ, நாவலையோ) சுயம் கவிதையாக அப்படியே தரவேண்டுமே தவிர அதிலே பட்டணத்துப் பால்காரனாகத் தண்ணீர் ஊற்றிப் பெருக்கித் தரக்கூடாது இலக்கிய விமரிசகன் என்பது வெளிப்படை.

கம்பனுடைய காவியத்தைப்பற்றி விமரிசனம் செய்ய முன்வருபவன், கம்பனுடைய கவிதையை முக்கியமாகக் கருதி விமரிசனம் செய்யவேண்டுமே தவிர, என் கெட்டிக்காரத்தனத்தைப்பார், என் அறிவைப் பார் என்றெல் கம்பன் கவிதைக்குப் புறம்பானதை, இல்லாததைச் சொல்லிக் கதாகாலக்ஷேபம் செய்வதை இலக்கிய விமரிசனம் என்று சொல்ல முடியாது. ஆனால் அதற்காக இலக்கிய விமரிசகன் அறிவற்ற ஒரு சூனியத்தில் நிற்கிறான் என்பதல்ல. அவன் அறிவெல்லாம், அவன் திறனெல்லாம், அவன் படித்த படிப்பெல்லாம் அவன் விமரிசனம் செய்யும் நூலுக்கு அடங்கி நிற்கின்றன. அதை மீறிய எதையும் அவன் கவனிப்பதேயில்லை. தாக்ஷண்யம், பரிவு, அநுதாபம், பெரியவர், சின்னவர், காலத்தால் முந்தியவர், பிந்தியவர் என்பதெல்லாம் இலக்கியத்துக்கும் விமரிசனத்துக்கும் புறம்பான, அப்பாற்பட்ட விஷயங்கள்.

இலக்கிய விமரிசகன் இலக்கியம் என்கிற அளவில் பேராசைக்காரனாக இருந்துதான் ஆகவேண்டும் காவலில் ஜாக்கிரதையுள்ளவனாகப் போலி எதையும் இலக்கியச் சோலைக்குள்ளே அனுமதிக்காதவனாகவும் இருக்க வேண்டும்.

இத்தனையும் பொதுவாகக் கூறிய பிறகு தமிழைப் பற்றியவரையில் இன்னொன்றும் சிறப்பாகக் கூறவேண்டும். தமிழில் இன்று இலக்கிய விமரிசனம் செய்ய முன்வருபவன் மற்ற உலக மொழி இலக்கிய இயக்கங்களிலும் ஆழ்ந்த அறிவுள்ளவனாக இருக்கவேண்டிய அவசியம் இருக்கிறது. மற்ற மொழி இலக்கியங்களில் இன்று நிர்மாணமாகியுள்ளது போலத் தமிழிலும் நல்ல நூல்கள் வரிசை, classics, ஒன்றைத் தமிழுக்கும் ஏற்படுத்தித் தருவதில் அவன் கண்ணும் கருத்துமாக இருக்கவேண்டும். பழசு புதுசு இரண்டிலும் நல்ல நூல் வரிசை நிர்த்தாரணம் செய்யும் சக்தியுள்ளவனாக இருக்கவேண்டும். இன்றைய மொழி இலக்கியம் எதுவும் தனித்தியங்காது. உலக மொழி இலக்கியத்துக்கெல்லாம் வாரிசுதான் இன்றையத் தமிழ் இலக்கியமும் என்கிற உண்மையை எப்போதும் மறக்காதவனாக இருக்க வேண்டும்.

தமிழில் இலக்கிய விமரிசனம் வளரட்டும். ஏனென்றால் தமிழ் இலக்கியம் வளம்பெற அதுவே இன்றும் சிறந்த வழி.

(நன்றி: விமரிசனக் கலை*)

---

* விமரிசனக் கலை: க. நா. சுப்ரமண்யம், வெளியீடு: தமிழ்ப் புத்தகாலயம். சென்னை-5. விலை; ரு. 2/50.

# அக்கம் பக்கம்

விமர்சனம் என்பதே ஒரு விதத்தில் அபிப்ராயம் சொல்லுதல்தான். ஒரு நாவலைப் பற்றி, சிறுகதையைப் பற்றி, கவிதையைப் பற்றி, நாடகத்தைப் பற்றி, கட்டுரையைப் பற்றி தனக்குத் தெரிந்த அளவில், தான் வாங்கிக் கொண்ட விதத்தில் ஒரு கருத்தைச் சொல்ல முற்படுகிறோம். இதையே கொஞ்சம் ஆழமாக, விமர்சனப் பிரக்ஞையோடு, மற்றவைகளோடு ஒப்பிட்டுப் பார்த்து இலக்கிய அணுதலோடு சாதாரணவர்களினின்று மாறுபட்டு விமர்சகன் செய்கிறான். அதனால்தான் அவனுடைய கருத்துக்கு ஒரு முககியத்துவம் வருகிறது.

தமிழில் இப்படி விமர்சனம் பண்ணுபவர்களின் எண்ணிக்கையை விரல் விட்டு எணணிவிடலாம். நமக்கு இன்னும் விமர்சனத்தில் ஒரு நம்பிக்கை வரவில்லை. விமர்சனம் செய்பவர்களைத் தனித்து வைத்து பார்க்கத் தெரியவில்லை. (இது ஒரு சில விமர்சனகர்த்தாக்களுக்கும் பொருந்தும்) விமர்சனத்தையும், விமர்சகரையும் பிணைத்துக் கொள்கிறோம். சொந்தக் காழ்ப்புக்களையும், வெறுப்புக்களையும் முன் நிறுத்திக் கொண்டு பார்க்கிறோம், அதனால் தான் விமர்சனத்தில் ஒரு பிணைப்பு ஏற்படவில்லை.

க. நா. சுப்ரமண்யத்தை ஒரு படைப்பாளியாக, ஒரு மொழி பெயர்ப்பாளராக பார்ப்பதைக் காட்டிலும் ஒரு விமர்சகராகப் பார்ப்பவர்கள்தான் அதிகம். க. நா. சு. வுக்கு விமர்சனத்தில் நம்பிக்கை கிடையாது. இருந்தாலும் அபிப்ராயங்கள் சொல்லுவார். 'நான் சொல்லும் அபிப்ராயங்கள் முற்றும் முடிந்த முடிவல்ல, ஒரு வாசகனை என்னுடைய அபிப்ராயங்கள் மூலம் புத்தகத்தைத் தேடிப் பிடித்துப் படிக்க வகை செய்யும் அளவுக்குத்தான் பயன்படும். அதுதான் என்னுடைய நோக்கமும்' என்று அவர் அடிக்கடி சொல்லுவார். ஒரு விதத்தில் இதுதான் சரியென்று படுகிறது. வாசகன் ஒருவன் நல்ல புத்தகத்தைப் படித்து அநுபவித்து அவனே அபிப்ராயங்களை வளர்த்துக் கொள்வதுதான் வளர்ச்சிக்குரிய ஒன்று. அதற்குதவும் வகையில்தான் க. நா. சு. வின் அபிப்ராயங்களும் இருக்கும்.

போனதலைமுறை எழுத்தாளர்களுக்குக் க. நா. சு. வின் அபிப்ராயங்களில் அதிருப்தி இருந்ததுமட்டு மலல, அவர் மேல் அசாத்தியக் கோபமும் இருந்திருக்கிறது. அவர் தரும் பட்டியலில் தங்கள் பெயர் விடுபட்டுப் போனதால் வந்த கோபம் என்பதைத் தவிர வேறு எந்தக் காரணமும் இருந்திருக்க முடியாது. 'தங்களுடைய படைப்புக்களை விமர்சகர்களால் கணிக்க முடியாது. காலம்தான் கணிக்கும்' என்று அன்று சொன்னவர்கள் அடபடிக் காலம் கணித்து விட்டதை தங்கள் காலத்திலேயே பார்த்து மௌனமாகி விட்டார்கள். இது க. நா. சு. வின் தீர்க்கதரிசனத்திற்கான பெருமை என்பதைவிட காலத்தைச் சொல்லி தன்னைக் காப்பாற்றிக் கொள்ள நினைத்த எழுத்தாளனின் அப்பாவித்தனத்திற்கான நிரூபணமாகத்தான் எனக்குப் படுகிறது.

இன்று இலக்கியப் பிரக்ஞை பிறந்திருப்பது மாதிரியே விமசர்னப் பிரக்ஞையும் பிறந்திருக்கிறது. சிருஷ்டிக்கப்படும் சிருஷ்டிகள் விமர்சனத்திற்கு உட்பட்டதுதான் என்ற எண்ணம் பரவலாகக் காணப்படுகிறது. அத்துடன் கூட முக்கியமாகப் படுவது இதுதான்: இன்றைய காலகட்டத்தில் இலக்கியப் பிரக்ஞையோடு எழுதும் எழுத்தாளர்கள் எல்லாருமே தனக்குத்தானே விமர்சகர்களாக இருக்கிறார்கள். தங்களுடைய படைப்புகளைப் பற்றித் தங்களுக்குள்ளேயே விமர்சித்துப் பார்க்கிறார்கள். மற்றவர்கள் கைக்குத் தங்கள் சிருஷ்டியைக் கொடுப்பதற்கு முன்பே அதைப் பூரணமாக தன்னுடைய அளவில் விமர்சித்துக் கொண்டு விடுகிறார்கள். அதனால்தான் இவர்களால் எண்ணிக்கையில் அதிகம் படைக்க முடிவதில்லை. ஆனால் படைக்கப்படும் ஒவ்வொன்றும் இலக்கியத் தரமாக இருக்கிறது. இந்த வளர்ச்சி என்னைப் பொறுத்த வரையில் சரியானதாகப் படுகிறது.

இன்றைய இந்தச் சூழ்நிலைக்குக் காரணம் க. நா. சு

தான். மற்ற மொழிகளோடு ஒப்பிட்டு, தமிழ் இலக்கியத்தின் திசையைக் காட்டியவர் அவர். அவருடைய சமகாலத்தவர்களில் பெரும்பான்மையோர் அதை புரிந்து கொள்ளாமல் ஆத்திரப்பட்டார்கள். அடுத்தத் தலைமுறை அவரை இனம் கண்டு கொண்டது. இன்று இலக்கியப் பிரக்ஞையோடு சிந்திக்கும் எவரும் க. நா. சு. வை மறக்கமுடியாது.

'கசடதபற' இந்த 32 பக்கங்களில் அவருடைய 60 வயது நிறைவுக்கு—இலக்கியச் சாதனைக்கு மரியாதை செய்து விட்டதாக யாரும் நினைத்து விடவேண்டாம். இது ஒரு முயற்சி. அவ்வளவுதான். இதைத் தொடர்ந்து இன்னும் பல காரியங்கள் செய்யப்பட வேண்டும்.

ஃ ஃ ஃ

இந்த வருஷம் சாகித்ய அகாடமியின் பரிசு நா. பார்த்தசாரதியின் 'சமுதாய வீதி'க்கு வழங்கப்பட்டிருக்கிறது. இதுவரை பரிசு வழங்கப்பட்ட நபர்களிலேயே குறைந்த வயதுடையவர் நா. பா என்று சொல்லிக் கொள்வதால் பெருமை கூடிவராது. ஒரு இலக்கியாசிரியனுக்குப் பெருமை சேர்ப்பதெல்லாம் அவனுடைய இலக்கிய சிருஷ்டிகள் தான். அதேபோல குறைந்த வயதில் நிறைய எழுதி விட்டதாலேயே பெருமை கிடையாது. அவருடைய இலக்கிய அந்தஸ்து தரமாக எழுதியிருப்பதைப் பொறுத்துத்தான் உள்ளது.

நா. பா. நிறைய எழுதியிருக்கிறார். சமூக நாவல்கள், சரித்திர நாவல்கள், சிறுகதைகள், கவிதைகள், கட்டுரைகள் என்று பெரிய பட்டியல் போடுமளவிற்கு நிரம்பவே எழுதியிருக்கிறார்.

ஆனால் தற்காலத் தமிழ் இலக்கியத்தில் அவருடைய சிருஷ்டிகளின் இலக்கிய அந்தஸ்து என்ன என்பதுதான் கேள்விக் குறியாகவே இருக்கிறது. அதீத கற்பனைப் பாத்திரங்களும், romantic elements சுடன் கூடிய நிகழ்ச்சிகளும், melo drama உத்திகளும், அழகான தமிழ் வார்த்தைகளும், இனிமையான கதாபாத்திரங்களின் பெயர்களும் மட்டுமே கொண்ட சிருஷ்டிகளை serious literatureராக ஒப்புக் கொள்ளும் பட்சத்தில் நா. பா. வை சாகித்ய அகாடமியோடு எல்லாரும் சேர்ந்து கொண்டு பாராட்டலாம். தனிப்பட்ட முறையில் நா. பா.வுக்குப் பரிசு கிடைத்ததில் எவருக்கும் ஆட்சேபணை இருக்க முடியாது. தற்காலத் தமிழ் இலக்கியத்தின் போக்கைக் காட்டும் சரியான படைப்புக்கு — படைப்பாளிக்குப் பரிசு வழங்கப்படவில்லை என்பதில்தான் கருத்து வேறுபாடு வருகிறது.

முன்பொரு தடவை நா. பா. வே இப்படிச் சொன்னதாக நினைவு: "சாகித்ய அகாடமி பரிசு பெறும் நூல்களைப் பார்க்கும்பொழுது இனி பிரசுரமாகும் புத்தகங்களில் இது சாகித்ய அகாடமி பரிசு பெறாத புத்தகம் என்று பெரிதாக அச்சிட்டு வெளியிட்டால் என்ன என்று தோன்றுகிறது". இப்பொழுது நா. பா. வுக்கே சாகித்ய அகாடமி பரிசு கிடைத்துவிட்டது. இனி என்ன செய்யப் போகிறார்?

— ந. கிருஷ்ணமூர்த்தி.

## மரம்

வானத்திலே எங்கேயோ உள்ள
சூரியனுடன் மத்து-மத்து ஆடுகிறது
என் நிழல்.
வேரடியில் தேங்கிக் கிடக்கும்
சாக்கடை நீரில் என் பிம்பத்தைக் கண்டு
வெறுப்புறுகிறேன் நான்.
என்னை வெட்டிச் சாய்க்க
வருகிற வீரன்
என் நிழலை மட்டும்
வெட்டிச் சாய்த்து விட்டானால்
நான் ஓங்கிக் கிளைத்து வளருவேன்—
ஒன்பதாய்ப் பெருகுவேன்.
என்னோடு
என் நிழலையும் சாய்க்க
உன்னால் முடியும்—
முடியுமா
என் நிழலை மட்டும்
அப்புறப் படுத்திவிட ?

க. நா. சுப்ரமண்யம்.

Published by N. Mahaganapathy 47 Nallathambi Mudali Street, Madras-5 Printed by M. K. Swamy at Prem Press, 8, M. K. Amman Koil S[illegible] Madras-4. Edited by N. Krishnamoorthy No. 1, Devadi Street, Madras-4.